# திருப்பூவணக் காசி

மதுரைக்கு அருகில் உள்ள திருப்புவனம்

தலபுராணமும் திருக்கோயிலின் சிறப்பும்

**கி. காளைராசன்** B.Sc., M.A.,M.Phil., PGDCA



# திருப்பூவணக் காசி

(மதுரைக்கு அருகில் உள்ள திருப்புவனம் தலபுராணமும் திருக்கோயிலின் சிறப்பும்)



கி. காளைராசன், B.Sc., PGDCA., M.A., M.Phil.

# Bibliography


| | | |
|---|---|---|
| Title of the Book | : | **Thiruppuvanak Kaasi** |
| Author | : | Thiru. K. Kalairajan, B.Sc., M.A., M.Phil., PGDCA<br>Assistant Registrar,<br>Alagappa University,<br>KARAIKUDI – 630 003<br>Mobile Phone - 94435 01912<br>e-mail : kkrajan26@yahoo.co.in |
| Publisher | : | K. Nithya<br>10, Gurunathar Kovil Street,<br>(Opp. to Singapore Apartments)<br>KOTTAIYUR – 630 106<br>Sivaganga District, Tamil Nadu., INDIA |
| Language | : | Tamil |
| Font | : | Ananku Classic - 10 point |
| Edition/No. of copies | : | First Edition / 1200 copies |
| Year of Publication | : | Sep. 2007 |
| Size of Book | : | 1/8 demmy |
| Number of Pages | : | 198 ( xx + 178) |
| Subject | : | Theology<br>(About a famous Siva Temple in Pandiyas' Kingdom) |
| Printer | : | Sri Lakshmi Printers,<br>#2C, Subramaniyapuram First Street,<br>KARAIKUDI - 630 002<br>Phone: 04565-224518, 324218, 230305 |

Price Rs.70/-

விலை ரூ.~~90/-~~ ரூ.70/-





"கோடி கொடுத்த கொடைஞன் குடியிருந்த
வீடும் கொடுத்த விழுத்தெய்வம் – தேடியும்
அள்ளிக் கொடுத்த அழகன் அறிவூட்டும்
வெள்ளி விளக்கே விளக்கு"

வள்ளல் அழகப்பரின் கொடை மேன்மைக்கு அன்புப் படையல்

– கி. காளைராசன்
– சோ. நாகலெட்சுமி
–கா.நித்யா

# உள்ளே

**கே.ஆர். பெரியகருப்பன்**
இந்து சமய மற்றும் அறநிலையத்
துறை அமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

நாள்..........

அன்புடையீர்,

தங்களால் எழுதி தவத்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்களின் திருக்கரங்களால் 24.09.07 அன்று வெளியிட இருக்கின்ற " **திருப்பூவணக்காசி** " என்ற நூலைப் படித்து மிக்க மகிழ்ச்சியடைந்தேன். சிவகங்கை மாவட்டத்தில் அமைந்துள்ள திருப்பூவணத்திற்கு பெருமை சேர்த்தமைக்கும், தங்களின் ஆன்மீகப் பணி மேன்மேலும் சிறக்கவும் எனது நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்

கே.ஆர். பெரியகருப்பன்
(கையொப்பம்)
13/9/07

பெறுநர்

திரு. கி. காளைராசன்,
உதவிப்பதிவாளர்,
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி.



## அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசிய தரநிர்ணயக் குழுவினரால் 'A' கிரேடு தரச் சான்று பெற்றது)

**காரைக்குடி – 630 003**

முனைவர் பெ. கன்னியப்பன்
துணைவேந்தர்

நாள் 22– 08–2006

### அணிந்துரை

மனித சமுதாயம் தான் தோன்றிய காலத்திலிருந்து பற்பலப் பரிணாமங்களைப் பெற்று இன்றைய நிலையை அடைந்துள்ளது. மனித மேம்பாட்டிற்கு அறிவியலும் ஆன்மிகமும் இருகண்கள் போன்றவை. இந்தியத் திருநாட்டில் குறிப்பாகத் தமிழ்த் திருநாட்டில் ஆன்மிக வளர்ச்சி வரலாற்றுப் பெருமையுடன் பயன் நிலைப் பெருமையையும் உடைய நிலையை அனைவரும் நன்கு அறிவோம்.

வேதங்களும், புராணங்களும், சமய நூல்களும், பன்னிரு திருமுறைகளும், நாலாயிரத் திவ்யபிரபந்தமும், இன்னபிறவும் நமக்கு ஆன்மிக வளர்ச்சியை மையமிட்ட சமயத்தின் வழிக் கிடைத்த பெரும் சொத்துக்களாகும். பண்பாட்டுக் கருவூலங்களாகவும் அவைகள் திகழ்கின்றன. பரிணாமவளர்ச்சியின் வழி கிடைத்த மனிதனின் உயரிய சிந்தனைகள் இப்பண்பாட்டுக் கருவூலத்தில் பாதுகாக்கப் பெற்றுள்ளன.

ஆன்மிகம், சமயத்தில் இயங்குகிறபோது திருக்கோயில்களை மையமிட்டு இயங்குகின்றன. திருக்கோயில்களின் இன்றியமை யாமையைக் கருத்தில் கொண்டு அக்காலச் சமுதாயத்தார் திருக்கோயில்களைப் போற்றி வந்துள்ளனர். சிறப்பு மிக்க இத்திருக்கோயில்களை மையமிட்டு ஆய்வுகள் அண்மைக் காலத்தில் நிகழ்த்தப் பெறுகின்றன. அவ்வகையில் அழகப்பா பல்கலைக்கழகத்தில் நிர்வாகப் பிரிவில் பணியாற்றும் திரு. கி. காளைராசன் திருப்புவனத் தல மேன்மைகளை ஆராய்ந்துள்ள திறம் பாராட்டிற்குரியது. "திருப்பூவணக் காசி" என்ற பெயரில் அரிய முயற்சியுடன் நூலாக்கிய திறம் மட்டற்ற மகிழ்ச்சியைத் தருகிறது.

நூலாசிரியரின் முயற்சிக்கும் மற்றும் அவரது ஆன்மிக ஆர்வத்திற்கும் பாராட்டுக்கள். இவர் மேன்மேலும் பல நூல்களை வெளியிட்டுத் தமிழுக்கும் தமிழருக்கும் வளம் சேர்க்க வாழ்த்துக்கள்.

ஒப்பம் 22–08–2006




# அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசிய தரநிர்ணயக் குழுவினரால் 'A' கிரேடு தரச் சான்று பெற்றது)

**காரைக்குடி – 630 003**

முனைவர் இரெ. தண்டபாணி
பதிவாளர்


நாள் 21– 08–2006

## வாழ்த்துரை



வள்ளல் அழகப்பரின் கனவு நினைவாகி 1985–இல் அழகப்பா பல்கலைக்கழகம் உருவாகியது. துவக்கத்தில் நான்கு துறைகள் மற்றும் இரண்டு உறுப்புக் கல்லூரிகளுடன் இருந்த அழகப்பா பல்கலைக்கழகம் (Unitary Type University) இன்று 16 துறைகள், இரண்டு உறுப்புக் கல்லூரிகள் மற்றும் 25 இணைப்புக் கல்லூரிகளைப் பெற்று அரிய வளர்ச்சியடைந்துள்ளது. திட்டமிட்டபணி, செயலிற் செம்மை என்ற முறையில் தேசியத் தர நிர்ணயக் குழுவினரால் 'A' தகுதி பெற்று விளங்குகிறது.

பல்கலைக்கழகம் துவங்கியபோது நண்பர் காளைராசன் இளநிலை உதவியாளராகப் பணியில் சேர்ந்து, பல்கலைக்கழக வளர்ச்சியுடன் பணிச் செம்மையும் தம்முடைய கல்வித் தகுதியையும் வளர்த்திருப்பது மகிழ்ச்சியளிக்கிறது. பணியில் சேரும்போது இளங்கலைப்பட்டம் மட்டுமே இவரது கல்வித் தகுதியாக இருந்தது. பின்னர், கணினிப் பயன்பாட்டில் முதுநிலை பட்டயப்படிப்பு, தமிழில் முதுநிலை மற்றும் ஆய்வு நிறைஞர் ஆகிய பட்டங்களைப் பெற்றுள்ளார். அவரது கவனம் தமிழில் லயித்ததிலிருந்து, அவரிடம் முற்றிலும் மாறுபட்ட குணாதிசயங்களைக் காண முடிகிறது.

இவர் திருக்கோயில் பற்றிய செய்திகளைத் தொகுத்து நூலாக்கம் செய்து இப்போது **"திருப்பூவணக் காசி"** என்ற பெயரில் வெளிவருகிறது. கோயிற்கலை, வழிபாட்டு மரபுகள், மக்கள் நம்பிக்கைகள், இலக்கியச் செய்திகள் ஆகியவற்றைத் தொகுத்து நூலாக்கிய திறம் பாராட்டிற்குரியது. கட்டுரைகள் எழுதும் பழக்கமும், நூலாக்க முயற்சியும் திரு. கி. காளைராசன் அவர்களிடம் நிறைந்திருப்பது வரவேற்பிற்கும் பாராட்டிற்கும் உரியது. அலுவலகப் பணியுடன் ஆன்மிகப் பணியையும் இணைந்து செயலாற்றுவது மற்றவர்களுக்கு முன்மாதிரியாக உள்ளது. தமிழ் நல்லுலகம், முயற்சியுடன் திகழ்கிற திரு.காளைராசனுக்கு ஆதரவும் பெருமையும் வழங்கும் என்பதில் ஐயமில்லை. இவரது பணியும் ஆய்வும் சிறக்க எனது மனமார்ந்த வாழ்த்துக்கள்.

ஒப்பம் 21–08–2006

# பாரதிதாசன் பல்கலைக்கழகம்
# திருச்சிராப்பள்ளி

முனைவர் இரா. பாலசுப்பிரமணியன்
தேர்வு நெறியாளர்

நாள் 20–08–2006

## ஆய்வுரை



தமிழ் ஆய்வுக்களங்களுள் திருக்கோயில் பற்றிய ஆய்விற்குச் சிறப்பான இடம் உண்டு. அழகப்பா பல்கலைக்கழகத்தில் மூதறிஞர் வ.சுப. மாணிக்கம் உள்ளிட்ட முன்னோடி அறிஞர்கள் சங்க இலக்கியத்தையும், இலக்கணத்தையும் ஆய்வுக் களமாக்கித் தமிழ்த்துறைக்குப் பெருமை சேர்த்தனர். அழகப்பா பல்கலைக்கழகத்தின் முதல் துணைவேந்தர் டாக்டர். இராதா தியாகராசன் அவர்கள் தமிழ் முதுகலையுடன் கோயிற்கலை விருப்பப் பாடமாக்கும் தமிழை உருவாக்கித் தந்தார்கள். அதுமுதல் தமிழ் நாட்டில் கோயில்கலை பற்றிய கல்வி சிறப்பாக இயங்கும் இடம் அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறைதான் என்று அறிஞர்கள் பலரும் பாராட்டும் சூழல் உருவாகியது. தமிழ்த்துறையில் தமிழ் முதுகலையின் ஒரு பகுதியாக திருக்கோயில் ஆய்வேடு சமர்ப்பிக்கும் பாடத்திட்டம் அமைந்தது. செட்டிநாட்டுப் பகுதியில் பெரும்பாலான திருக்கோயில்கள் அவ்வகையில் ஆய்வேடாக்கப் பெற்று வரலாற்று ஆவணங்களாக மாற்றப் பெற்றுள்ளன.

பல்கலைக்கழகத்தில் நிர்வாகப் பகுதியில் அலுவலராகப் பணியாற்றிய திரு.கி.காளைராசன், தமிழில் திருக்கோயில் பற்றி எழுதியுள்ள திறம் பாராட்டிற்குரியது. அவரின் **திருப்பூவணக் காசி** என்ற தலைப்பிலான இந் நூல் படிப்பதற்கு மட்டற்ற மகிழ்ச்சியைத் தருகிறது. பாண்டிய நாட்டுத் திருத்தலங்கள் 14–இல் திருப்புவனமும் ஒன்றாகும். இத்தலங்களில் நால்வர் பாடலும் கிடைக்கப் பெற்ற தலம் திருப்புவனம் என்பது பெருமையுடையது. இந்நூல் மொத்தம் பத்துப் பகுதிகளைக் கொண்டுள்ளது. இந்நூலில் திருத் தலத்தின் அமைவிடமும் பெருமைகளும், திருக்கோயிலின் அமைப்பும், அவ்வமைப்பின் சிறப்புக்களும், இத்தலத்துடன் தொடர்புடைய புராணச் செய்திகளும், தேவார திருவாசகப் பாடல்களும், திருப்புகழ் பாடல்களும் மற்றும் சிற்றிலக் கியங்களில் கூறப்பெற்றுள்ள சிறப்புக்களும் எடுத்துக் கூறப் பெற்றுள்ளன. கடைசி அத்தியாயத்தில், திருப்பூவணமானது காசியைவிட எவ்வாறு சிறந்தது என்று எடுத்துரைக்கும் திறம் இவரது திறமைக்குச் சான்றாக உள்ளது.

இந்நூலின் பின்னிணைப்பாக இத்தலத்துடன் தொடர்புடைய பாடல்கள் இணைக்கப் பெற்றுள்ளமை நூலாசிரியரின் ஆர்வத்தையும், திறமையையும், கடின உழைப்பையும் உணர்த்துகிறது. நூலாசிரியரின் முதல்நூல் தரமான நூலாக அமைந்தமை பாராட்டிற்குரியது. இவர் மேலும் பல நூல்களை உருவாக்கித் தமிழுக்கும் அழகப்பா பல்கலைக்கழகத்திற்கும் பெருமை சேர்க்க வாழ்த்துக்கள்.

ஒப்பம் 20–08–2006

# சிவகங்கை சமஸ்தானம்
# தேவஸ்தானம் சிவகங்கை

பா. இளங்கோ, B.Com., B.L.,
மேலாளர்.

நாள் 28-08-2007

## மதிப்புரை

மக்கள் சேவையையும், மகேசன் சேவையையும் தங்களது இரு கண்களாகப் போற்றி நல்லாட்சி செய்தனர் சிவகங்கை மன்னர்கள். சிவகங்கைச் சீமையிலுள்ள ஆலயங்களைச் சிறப்புடன் நிர்வகித்தும், நித்திய பூசைகள் நடைபெறத் தேவையான கட்டளைகளை ஏற்படுத்தியும் சிவகங்கை மன்னர்கள் அறங்கள் பல செய்து தர்மம் காத்து வந்துள்ளனர்.

சிவகங்கை சமஸ்தான தேவஸ்தானத்தில் 1)சிவகங்கை, 2)திருக்கோட்டியூர், 3)கண்டதேவி, 4)காளையார் கோவில், 5)மானாமதுரை, 6)திருப்புவனம் மற்றும் மதுரை, 7) திருவெற்றியூர் ஆகிய ஏழு சரகங்களில் மொத்தம் 108 திருக்கோயில்களும் அதன் உபகோயில்களும் உள்ளன. இவற்றுள் பாண்டியநாட்டின் பழம்பதிகளாய் விளங்கும் தேவாரப் பாடல் பெற்ற திருப்பூவணம், காளையார்கோவில் ஆகியனவும் அடங்கும்.

பண்டைக்காலத்தில் முடியுடை மூவேந்தர்களும் ஒன்றாகத் திருப்பூவணம் வந்து இறைவனை வணங்கித் திறை செலுத்தியுள்ளனர். இச்சிறப்பு வேறுதிருத்தலங்களுக்கு இருப்பதாகத் தெரியவில்லை. இவ்வாறான சிறப்புகள் பல பெற்ற திருப்பூவணத்திருத்தலச் செய்திகளையும் பாடல்களையும் தொகுத்து ஆராய்ந்து, திருப்பூவணக் காசி என்ற தலைப்பில் நூலாக வெளியிடுவது மட்டற்ற மகிழ்ச்சியைத் தருகிறது.

நூலாசிரியர் திரு.கி.காளைராசன் அவர்களுக்கு வாழ்த்துக்கள்.

ஒப்பம் 28-08-2007

# என் உரை

## திருச்சிற்றம்பலம்

அறிவியல் அறிவினால் இன்று பல அற்புதங்கள் நடைபெறுகின்றன. அகில உலகத்தையும் உள்ளங்கைக்குள் அடக்கும் வண்ணம் தகவல் தொழில் நுட்பம் வளர்ச்சிபெற்றுள்ளது. இத்தகைய அறிவியல் வளர்ச்சியானது இரண்டாம் உலகப்போருக்குப் பின்னர் ஏற்பட்டது. இரண்டாம் உலகமகா யுத்தத்தின் போது அமெரிக்கர்கள் வீசிய அணுகுண்டுகள் ஜப்பானில் பேரழிவை ஏற்படுத்திப் பலலட்சம் உயிர்களைப் பலி கொண்டன. இருப்பினும் அமெரிக்கா இன்றளவும் அணுஆயுத நாடாகவே உள்ளது. ஆனால், ஆயிரக்கணக்கில் படை வீரர்கள் மாண்டதைக் கண்டு துறவு அரசு பூண்டவன் மகாசக்கரவர்த்தி அசோகன். பறவையின் துன்பத்தைத் தன்துன்பமாகக் கொண்ட கௌதமபுத்தர். தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான் பிறிது இன்உயிர் நீக்கும் வினை என்று குறள் பாடிய திருவள்ளுவர். முல்லைக்குத் தேர் ஈந்த பாரி. மயிலுக்குப் போர்வை போர்த்திய பேகன். வாடிய பயிர் கண்டு வாடிய வள்ளலார். இவ்வாறாக, பிறஉயிர்களைத் தன்னுயிரினும் மேலாகக் கருதிய புண்ணியர்கள் பலரை இந்தியத் திருநாட்டில் மட்டுமே காணமுடியும். கொல்லாமை என்னும் உயர்ந்த எண்ணத்திற்கு ஆதாரமாக அமைந்திருப்பது இறைவழிபாடேயாகும்.

எனது தந்தையார் மானாமதுரைத் தாலுகா மாரநாடு கிராமத்தைச் சேர்ந்த நா.ரா.கிருஷ்ணன் அம்பலம் அவர்கள் காவல்துறையில் காவலராக (Police Constable) திருப்பூவணத்தில் 1969–74ம் ஆண்டுகளில் பணியாற்றினார்.



திரு. ராமச்சந்திரன்
நல்லாசிரியர் விருது
பெற்றவர்

அந்த ஆண்டுகளில், நான் திருப்பூவணத்தில் அரசு உயர்நிலைப் பள்ளியில் கல்வி கற்றேன். அங்கு கணித ஆசிரியராகப் பணியாற்றிய உயர்திரு. இராமச்சந்திரன் அவர்களது தெய்வ பக்தியும், ஆசிரியப் பணியில் அவர் அயராது உழைத்த விதமும், ஏழை மாணவர்களுக்கும், குறைவான மதிப்பெண் வாங்கிய மாணவர்களுக்கும் கூடுதல் வகுப்புக்களை எவ்விதமான பணப் பயனையும் எதிர் பாராமல் நடத்தி உதவினார். அவரது செயல்பாடுகள் என்னை வெகுவாக ஈர்த்தன. அவரையே எனது முன்மாதிரியாகக் கொண்டு படித்துவந்தேன்.

நான் திருப்பூவணத்தில் படித்த காலத்தில், மார்கழி மாதங்களில் அதிகாலையில் எழுந்து திருக்கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபடும் பேறு கிடைக்கப் பெற்றுள்ளேன். கடைநிலையிலிருந்த என்னை, கோயில் தொடர்பான நூல் எழுதும் நிலைக்கு உயர்த்திய திருப்பூவணநாதரின் திருவருளை எங்ஙனம் நான் எடுத்துரைப்பது!

1999ம் ஆண்டு அழகப்பா பல்கலைக்கழகத்தில் விடைத்தாட்கள் மதிப்பீட்டுப் பணிகளின் ஒருங்கிணைப்பாளராக முனைவர் இரா. பாலசுப்பிரமணியன் ஐயா அவர்கள் பணியாற்றி னார்கள். அதுபொழுது நான் தேர்வுப் பிரிவில் கண்காணிப்பாளராகப் பணியாற்றினேன். எனது கட்டுரைகளை அவரிடம் காண்பித்தேன். அவரும் அவற்றைத் திருத்தி என்னை ஊக்குவித்து எனது கட்டுரைகளுக்கு ஏற்ற இதழ்களின் முகவரிகளைக் கொடுத்துக் கட்டுரைகளை அனுப்பச் செய்தார். இதனால் 2000 ம் ஆண்டின் முதல்வாரத்தில் எனது "வள்ளுவரும் வாஸ்துவும்" என்ற கட்டுரை தினபூமியில் முதன் முதலில் வெளியாகியது. அவர், என்னிடம் ஒருமுறை "கட்டுரை எழுதுவது மட்டும் சிறப்புடையதாகாது. அதற்குக் கல்வியும் மிக அவசியம்" என்று கூறியருளினார். அவருடைய உந்துதலால் நானும் தமிழில் முதுகலை (M.A. Tamil) பயின்று, பின்னர் தமிழில் ஆய்வியல் நிறைஞர் (M.Phil. Tamil) பயின்று முடித்தேன். தற்போது அவரே எனது முனைவர் (Ph.D.) பட்டத்திற்கான ஆய்வுநெறியாளராக இருக்கிறார். அவரது நெறிகாட்டுதலின் கீழ் திருப்பூவணப் புராணத்தை ஆய்வு செய்து வருகிறேன். குருவருளும், திருவருளும் கிடைக்கப்பெற்றதனால் சுமார் 16 கட்டுரைகளுக்கும் மேலாக எழுதி வெளியிடும் பெருமை கிடைக்கப் பெற்றுள்ளேன்.

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் அவரது அவையடக்கப்பாடலில், *"சிவபெருமான், விரும்பத்தக்க சந்திரனோடு, விரும்பத்தகாத பாம்பினையும் சடையில் அணிந்துள்ளான். அது எதற்கு எனில், திருஞானசம்பந்தரின் சிறந்த பாடல்களோடு என்னுடைய இழிந்த பாடல்களையும் விருப்பு வெறுப்பு இல்லாமல் உயர்வு தாழ்வு நோக்காமல் ஏற்றுக் கொண்டு அருள் புரிதலை உணர்த்துவதற்கே ஆகும்"* என்று பாடியுள்ளார்.

மகாவித்துவான் அவர்களே அவ்வாறு கூறியுள்ளார்கள். நானோ மிகமிகச் சிறியேன். எனவே இந்நூலினை வாசிக்கும் வாய்ப்புக் கிடைத்த ஆன்றோரும் சான்றோரும் இதில் குற்றம் குறை ஏதுமிருந்தால் அவற்றைப் பொறுத்தருளுமாறு தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன். மேலும், அறியப்படும் குறைகளை எனக்குத் தெரிவித்துத் திருத்திக் கொள்ள உதவிடுமாறு அன்புடன் வேண்டுகிறேன். இந்நூலை அகம் மகிழ்ந்து வாசிப்போர் அனைவரும் திருப்பூவணநாதரின் திருவருளால் நலம் பல பெற்று வளமுடன் வாழ்ந்திட வாழ்த்துகிறேன்.

திருச்சிற்றம்பலம்

அன்புடன்
கி. காளைராசன்

உ



## காப்பு

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

## நூற்பயன்

ஒப்பிலாத வுருத்திர சங்கிதை யுற்ற பூவண நற்கதை யோதுவோர்
செப்புமாறு செவிக்கொடு மன்னிய சிட்டராய சிறப்புறு தன்மையோர்
விப்பிராதி பவித்தக மெய்ம் மொழிமிக்க வேத விதத்துயர் மாதவர்
தப்பிலாத தவத் திருமன்னவர் தயாபரன் கயிலைக்கிரி வாழ்வரே

## பூவண நாதர் வாழ்த்து

பூமாது மகிழ்துளபப்புயல்வண்ண நெடுமாலும்புகழ்வெண்கஞ்ச
நாமாதுநடனமிடு நான்மறைதேர் நான்முகனுநயப்ப நன்னீர்த்
தேமாது செழும்பவளச் சடையிருப்பத்திங்களிருடுரப்பச்சைல
மாமாது வடிவிலங்கமன்னிய பூவணத்தான்றாள் சென்னிசேர்ப்பாம்.

## மன்னர் வாழ்த்து



சிவகங்கை மன்னர்கள் இக்கோவிலின் பரம்பரைத் தருமகர்த்தா ஆவார்கள். அதன்படித் தற்போது மாட்சிமை பொருந்திய சிவகங்கைச் சீமையின் இராணியார் D.S.K.மதுராந்தகி நாச்சியார் அவர்கள் இக்கோயிலை நிருவகித்து வருகிறார்கள். இக்கோயில் தமிழக அரசின் இந்து அறநிலையத் துறையின் கீழ் இயங்கி வருகின்றது.



மாண்புமிகு தமிழக முதல்வர் கலைஞர் மு.கருணாநிதி அவர்களும், மாண்புமிகு இந்து அறநிலையத்துறை அமைச்சர் கே.ஆர்.பெரியகருப்பன் அவர்களும், மாட்சிமைபொருந்திய சிவகங்கைச்சீமை இராணியார் D.S.K.மதுராந்தகி நாச்சியார் அவர்களும், திருப்பூவணநாதர் திருவருளால் நலம் பல பெற்று வளமுடன் வாழ்ந்திட வேண்டும். இவர்களது நல்லாட்சியினால் திருக்கோயில்களில் வழிபாடுகளும் திருவிழாக்களும் செவ்வனே நடைபெறவேண்டும். மக்கள் அனைவரும் நோய்நொடிகள் நீங்கப்பெற்று சுபிட்சமாக வாழ வேண்டும்.



வாழ்க மன்னவன் செங்கோன்
மழைமுகில்
வாழ்க நான்மறை வாணர்கணானிலம்
வாழ்க வைதிக சைவமலர்த்திரு
வாழ்க வஞ்செழுத்துண்மை நன்மந்திரம்

திருச்சிற்றம்பலம்

## Synopsis

### Introduction

As Man differs from the animals because of his intellect. **Tholkappiar** (an ancient Tamil Poet who wrote Grammar to Tamil Language) classifies intellect into six categories. *"Àrru areevathu avatrodu manane"*. Manney *Tholkappiar* identifies intellect as the sixth sense. It is only the intellect identifies the concept of shame. A disrobed man is a half a human being. Man is distinguished from animals only through his dress, cooked food, education, science and spirituality. Even as the living creatures are elevated from the fifth sense to the sixth sense an Institution is necessary like wise to elevate man from the sixth sense to a higher stage. Hence the temple act as a social institution to elevate man to God head. That is why people follow a religion and worship God.

Through out the world followers of many religions either worships the apostles of God or Religious heads. But Hindu's worship only the idols of God and lead a Godly life.

Hinduism is not a religion. It is a symbol of the growth of Human civilization. A new dimension of a sixth sense of worship of God is not due to fear, but a realization of the growth of matured intellect. The images of Gods have not been carved into indiscriminately. They have been conceptualized by our Forefathers only after a deep sense of reasoning.

It is difficult to trace the Origin of Hinduism. Most of the contemporary religions are only in the infant state and it is needless to state that they will be only a part of Hinduism when they grow up.

### Revamp of Hinduism in Tamil Nadu

Before the 7th century AD in Tamil Nadu, Jainism and Buddhism were the dominated religions. During that period the four great *Saivaite Quartet* restores the pristine glory of *Saivism*. They traveled far and wide in the *Pandya* kingdom extolling and singing the glory of God. There are 14 Shrines where there songs are available. These 14 Shrines in the *Pandiya* Kingdom are known as ***Pandi-14.***

Amongst the 14 Shrines, Madurai, the Capital of the *Pandiya* Kingdom is the most ancient. But the city was ravaged due to the war of Lord **Indra**, the curse of **Kannagi**, which consumed Madurai, and the spate in the river *Vaigai* was

brought back to life again and again but the only Shrine which maintains its ancient glory is Thiruppu vanam. It is said that Goddess *Parvati*, to expiate from her sin, sat under the *Parijatha Tree* for Penance.

Thiruppuvanam is situated nearby the Holy Madurai City. It is in the Madurai-Rameswaram National Highway and 18 k.m. away from Madurai. As like Madurai, this city is also situated in the southern bank of river *Vaigai*.

**Thiruppuvanam in Puranas**

Indian *Puranas* are classified into 18. Among them, one *purana* is named as ***Prema Kaivartha Puranam***. In it, in twenty episodes, the glories of the Thiruppuvanam are narrated. And it was translated in the Tamil Language and named as "**Thiruppuvanap Puranam**" by *Kandasamy Pulavar*.

More over the glories of Thiruppuvanam are narrated in 3 episodes in **Thiruvillaiyadar Puranam** of ***Paranjothi Munivar***.

**History of the Siva Linga**

The Goddess Parvati had intended to visit the *Yaga* done by his father for which no invitation was given to her Husband Parameshwara. SHE was banned to attend the *Yaga*. But SHE argued and quarreled with Her Husband and moved to *yaga*. This type of known mistakes (argument and quarreling with husband) became as sin on Her. SHE worshiped the Lord Siva to remove the sin at Thriuappuvanam. There a Siva Lingam emerged beneath of *Parijatha* tree and dispelled the Sin of Parvati and for others who worhsips Him to dispel from the sins.

**Glories of the Lingam**

1. It is said by Paranjothi Muniver in Thiruvillaiyadal Puranam that the Siva Lingam in Thriuppuvanam is in the **compressed form of the total Universe**.
2. The **Sun** worshiped this idol to acquire powers to be a Master among all planets.
3. This is the Holy Spot where **Lord Brahma** was rid off his willful sin.
4. **Mahavishnu** acquired the Weapon (*Chakra Ayutham*) to kill **Jalanthran**

5. Goddess **Kali** worshiped the *Sivalinga* in this shrine
6. **Thiranasanan** attained Salvation and the Sinner **Thunmanjyan** likewise was absolved of his sin in this place.
7. The sacred ash brought in a Urn by the Brahmin **Tharmagnanan** transformed into flowers
8. **Uthpalangi**, a girl was blessed with a good husband and lived as a "*Sumangali*"
9. It is the holy place, where willful commission of all our sins are absolved
10. The sins of **Sengamalan** was absolved in this holy place.
11. The curse of Goddess **Laxmi** was dispelled in this holy place.
12. This is Holy place where **Parvati** did penance to attain the blessings of God.
13. This is the holy place where the ancestors of king **Suchothi** came in person to receive the rice balls (*Pindam*)
14. A shrine of Holy waters (one river and five ponds)
15. A shrine where a frog named Jalanthiran was transformed into Monarch.
16. The holy shire where adversities of the *Kaliyuga* were transformed to **King Nala** who attains mental peace
17. The Holy place where the Sages **Manthyanthina** and **Thyanakatta** received the holy benediction from Lord Shiva.
18. Kewara *(Thalamboo)* flower (which was in the head of the Lord Siva) worshiped Lord Siva to absolved of the sin for having uttered a lie.
19. The *Chera, Chola* and *Pandya* (The Three Kings of Tamil Nadu) came together and offer worship in this place.
20. **ThiruGnana Sambandar, Appar**, and **Sundarar** have visited this place, worshiped the lord and offered songs on the glory of HIM.
21. The Holy Shrine where **Manickavasagar** has offered songs on Thiruppuvana Nathar.
22. The Holy Place where **Karur Thever** Sang the *Thiruvisaipa*
23. The Holy Place where a song of **Arunagiri Nathar**'s Thirupugazhal glorifies the shrine.
24. The Holy Place where the Lord Siva came in the form of a **Siddhar** and performed alchemy and displayed His *leela*.
25. Holy place where **Ponnanayal** received the holy blessings
26. The Holy Place where the **Korakka Siddher** and **Kathirikkai Siddhar** still live in *Jeeva Samathi*.

**Temple**

The Siva Linga is older than the past three eras (three *Ugas*). The ***Karuvarai mandapam*** was built before 7th Century. ***Artha Mandabam*** and ***Maga Mandapam*** were build during 7th to 13th Centuries. The Lord Siva is named as ***Pushpavaneswarar*** . The Goddess is named as ***Soundara Nayaki.***

A **Perumal Temple** is situated very near to this Siva Temple. The ***Alagiya Manavalap Perumal*** with ***Sri Devi and Poomi Devi*** in a standing posture showering their blessings on the devotees.

**Location**

The city Thiruppuvanam is situated in the north bank of the Vaigai River and 18 k.m. away from Madurai in Rameswaram National Highway. The Railway line from Madurai to Rameswaram also passes through this city.

This book has been written for the benefit of the public to visit and receive the blessing at Thiruppuvanam where one of the ancient Shrines where **Lord Siva** and Goddess are the presiding deities who shower the blessings of the devotees.

THIRUCH CHITRAMBALAM

*****

# திருப்பூவணக் காசி



திருப்பூவணம் – பெரிய கோபுரம்

# 1. திருப்பூவணத் திருத்தல அறிமுக உரை

அறிவினால் மனிதன் விலங்குகளிலிருந்து வேறுபடுகிறான். அறிவினை ஆறுவகையாகப் பிரித்துத் தொல்காப்பியர் "ஆறு அறிவதுவே அவற்றோடு மனனே" என்று மனத்தினை ஆறாவது அறிவாகக் குறிப்பிடுகிறார். மனத்தால் உணரப்படுவது மானம்! ஆடையில்லாத மனிதன் அரைமனிதன் ஆவான். உடை, அவியுணவு, கல்வி, அறிவியல், இறையுணர்வு என்ற பிற சிறப்பியல்புகள் மனிதனை விலங்குகளிலிருந்து மேம்பாடுடையவனாகக் காட்டுகின்றன. ஐந்தாம் அறிவிலிருந்து ஆறாம் அறிவிற்கு உயர்ந்த மனித இனம் அதற்கு அடுத்தாற்போல் ஆறாம் அறிவிலிருந்து அதனினும் மேம்பட்ட உயர்நிலைக்கு மாறுதல் பெறுவதற்காக ஒரு நிறுவனம் தேவையானது. அவ்வாறு மனிதனை மனிதநிலையிலிருந்து இறைநிலைக்கு உயர்த்தும் ஒரு சமூக நிறுவனமாக (Social Institution) திருக்கோயில்கள் விளங்குகின்றன. ஆகவே, மனிதர்கள் ஏதேனும் ஒரு மதத்தைப் பின்பற்றி இறைவனை வணங்கி வழிபடுகின்றனர்.

உலகம் முழுமையும் ஏனைய சமயத்தினர் இறைவனின் தூதுவர்களையோ அல்லது சமயத்தலைவர்களையோ வணங்கி வழிபடுகின்றனர். ஆனால் இந்துக்கள் மட்டுமே கடவுளின் திருஉருவங்களை அறிந்து வணங்கி வாழ்பவர்களாக உள்ளனர்.

இந்து மதம் என்பது ஒரு மதமே அல்ல! அது மனித நாகரீக வளர்ச்சி!! ஆறாம் அறிவின் பரிணாம வளர்ச்சி. இறைவனை வழிபடுதல் என்பது பயத்தினால் அல்ல, பண்பாட்டு அறிவினால் ஆகும். இறைவடிவங்கள் ஏதோவொரு வகையில்

வடிவமைக்கப்பட்டன அல்ல, நமது முன்னோர்களால் ஆய்ந்து அறிந்து கண்டுபிடிக்கப்பட்டனவாகும்.

இந்து மதம் தோன்றிய காலத்தைக் கணக்கிட முடியாது. தற்போது தோன்றியுள்ள மதங்கள் எல்லாம் இன்றைக்குக் குழந்தை நிலையில் உள்ளன. இவைகள் வளர்ந்து மேம்படும் போது இந்து மதத்தின் ஒரு பிரிவு போன்று மாறியிருக்கும் என்றால் அது மிகையாகாது.

## பாண்டி பதினான்கு

தமிழகத்தில் கி.பி. ஏழாம் நூற்றாண்டுக்கு முன்னர் சமணமும் புத்தமும் தலையெடுத்து வளர்ந்தோங்கி இருந்தன. அதனை மாற்றிச் சைவத்தை மீண்டும் அதன் நிலைக்குக் கொண்டு வந்தவர்கள் சமய குரவர்கள் நால்வராவர். இவர்கள் பண்டைய பாண்டிய நாட்டில் இறைவனைப் பாடிப் பணிந்த இடங்கள் பலவாகும். அவற்றுள் அவர்களின் பாடல்கள் கிடைக்கப் பெற்ற திருத்தலங்கள் பதினான்கு ஆகும். இந்தப் பதினான்கு திருத்தலங்களையும் பாண்டி பதினான்கு என்று சிறப்பித்துக் கூறுகின்றனர்.

*1) மதுரை,*
*2) திருப்பரங்குன்றம் ,*
*3) திருவிராமேச்சரம்*
*4) திருவாடானை,*
*5)திருப்புத்தூர்,*
*6)திரு ஏடகம்,*
*7) திருநெல்வேலி,*
*8) குற்றாலம்,*
*9) ஆப்பனூர் (மதுரையின் வடகரையில் உள்ள ஊர்)*
*10)திருச்சுழியல்,*
*11)திருப்புனவாயில்,*
*12)கொடுங்குன்றம் (பிரான்மலை),*
*13) காளையார் கோயில்,*
*14) திருப்பூவணம்.* [1]

இப்பதினான்கு பதிகளில் மிகவும் பழமையானது பாண்டியநாட்டின் தலைநகராக விளங்கும் மதுரை ஆகும். ஆனால் மதுரை மாநகரம் இந்திரனுடனான போரினாலும், கண்ணகி இட்ட

---

[1] "தென்மதுரை பரங்குன்றந் திருவிராமேச்சர மாடானை புத்தூர்
பன்னுதமிழேடக நெல்வேலி பகர் குற்றாலமாப்பனூர் பார்
மன்னுபுனற்சுழியல் புனவாயில் கொடுங்குன்றமெழின் மருவுகாளை
பொன்மதில் சூழ் பூவணமும் பொருந்துகின்ற புகழ்ப் பொதியப் பொருப்பனாடு"
*திருப்பூவணப் புராணம் – திருநாட்டுச் சருக்கம் – பாடல் எண். 7.*

தீயினாலும், வையை ஆற்றுப் பெருக்கினாலும் அழிந்தழிந்து மீண்டும் மீண்டும் உயிர் பெற்றது. ஆனால், திருப்பூவணத் திருத்தலம் தொன்மைக்காலம் முதல் அழிவிற்கு உட்படாமல் அப்படியே பழமையுடன் உள்ளது.

பார்வதி தேவியார் தான் அறிந்து செய்த பாவம் போக்க இத்திருத்தலம் வந்து பாரிசாத மரத்தின் அடியிலிருந்து தவம் செய்தார். அப்போது சிவபெருமான் அம்மரத்தின் அடியில் சிவலிங்கமாய் முளைத்து, உமையம்மையின் பாவத்தை நீக்கியருளினார்.

1) கதிரோன் (சூரியன்) இச்சிவலிங்கத்தை வழிபட்டு வரம் பெற்றுள்ளான்.
2) பிரம்ம தேவன் அறிந்து செய்த பாவத்தை நீக்கிய திருத்தலம்
3) மகாவிஷ்ணு, சலந்திரனைக் கொல்ல சக்கராயுதம் பெற்ற திருத்தலம்
4) காளிதேவி, சிவலிங்கம் வைத்து பூசித்த திருத்தலம்
5) திரணாசனன் என்பவன் வீடு பேறு அடைந்துள்ளான். துன்மஞ்ஞன் என்ற மாபாவி நற்கதி அடைந்துள்ளான்.
6) தருமஞ்ஞன் என்ற அந்தணன் கொண்டு வந்த அஸ்திக் கலசத்தில் இருந்த எலும்புகள் பூவாய் மாறிய திருத்தலம்.
7) உற்பலாங்கி என்ற பெண், நல்ல கணவனை அடையப்பெற்று தீர்க்க சுமங்கலியாய் வாழும் வரம் பெற்றுள்ளாள்.
8) அறிந்து செய்த பாவங்களை அகற்றும் திருத்தலம் [1]
9) செங்கமலன் என்பவனின் பாவங்கள் அனைத்தையும் நீக்கிய திருத்தலம்
10) திருமகளின் (இலக்குமி தேவியின்) சாபம் தீர்ந்த இடம்
11) பார்வதி தேவியார் இறைவன் திருவருள் வேண்டித் தவம் செய்த திருத்தலம்
12) சுச்சோதி என்ற அரசனுடைய பிதுர்கள் (இறந்துவிட்ட முன்னோர்கள்) நேரில் வந்து பிண்டம்

---

[1] "செங்கதிர் வெய்யோன் பூசை செய்தவாறுந் திகழ் திரணாசனன் வீடு சேர்ந்தவாறும்,
பொங்குமணிகன்னிகை நீர்பொருந்துமாறும் புகலருந் துன்மனன் கதியிற்புக்கவாறுந்,
தங்கு தருமஞ்ஞன் முத்தி சார்ந்தவாறுந் தன்னிகருற்பலாங்கி பதிசார்ந்தவாறும்,
பங்கமில் பாற்கரபுரப்பேர் படைத்தவாறும் பன்னுமெலாப் பவங்களையும் மாற்றுமாறும்"
திருப்பூவணப் புராணம் – பாயிரம் – பாடல் 1

(இறந்தவர்களுக்குப் படைக்கப்படுவது) பெற்றுக்கொண்டு, அவனை ஆசிர்வதித்த திருத்தலம்[1]

13) தீர்த்தங்கள் பல உள்ள திருத்தலம்
14) சலந்திரன் என்ற தவளைக்குச் சக்கரவர்த்தியாய் இருக்கும் வரம் அருளப்பட்ட திருத்தலம்
15) நள மகாராசாவிடமிருந்த கலிகாலத்தின் கொடுமையை அகற்றி அவனுக்கு மனச்சாந்தி அளித்த திருத்தலம்
16) மாந்தியந்தின முனிவருக்கும் தியானகாட்ட முனிவருக்கும் சிவபெருமான் சிதம்பர நல் உபதேசம் வழங்கிய இடம்[2]
17) தாழம்பூ பொய்சொன்ன பாவம் நீங்க வேண்டி, சிவபெருமானை வணங்கி வழிபட்ட திருத்தலம்
18) மூவேந்தர்களும் (சேர, சோழ, பாண்டிய மன்னர்கள்) ஒன்றாக வந்து வழிபட்டுத் திறை செலுத்திய திருத்தலம்[3]
19) திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் (அப்பர்), சுந்தரர் ஆகியோர் வணங்கி வழிபட்டுத் தேவாரம் பாடிய திருத்தலம்

---

[1] "செங்கமலன் சாபமுற்றுந் தணிந்தவாறுந் திருமகடன் சாபந்தான் றீர்ந்தவாறு,
மங்கையவதாரஞ் செய்தமர்ந்தவாறும் வார்சடையோனவளை மணம்
புணர்ந்தவாறுந்,
தங்கிய தக்கன் வேள்வி தகர்த்தவாறுஞ் சங்கரி பூவணத்தில் வந்தவாறுந்
தீர்த்தங்,
கொங்கணிசுச்சோதி தானாடுமாறுங் கோதில் பிதிர்களை முத்தி சேர்த்தவாறும்"
– திருப்பூவணப் புராணம் – பாயிரம் – பாடல் 2

[2] "அருளுடனே தீர்த்தங்களாடுமாறு மருங்கலியின் வலியை நளனகற்றுமாறுந்,
திருவிழாவணிபெறச் செய்வித்தவாறுஞ் சிதம்பரநல்லுபதேசஞ் செய்தவாறுந்,
தருமுலகிற் சகாத்த மாயிரத்தைஞ் ஞூறு தங்குநாற்பான் மூன்று தந்தவாண்புற்,
பொருவருநற் புலவோர் சொற்புலமை காட்டப் புட்பவனபுராணமெனப்
புகலலுற்றேன்"
– திருப்பூவணப் புராணம் – பாயிரம் – பாடல் 3

[3] "அறையார் புனலு மாமலரு மாடர வார்சடைமேற்
குறையார் மதியஞ் சூடி மாதோர் கூறுடை யானிடமா
முறையான் முடிசேர் தென்னர் சேரர் சோழர் கடாம் வணங்குந்
திறையா ரொளிசேர் செம்மை யோங்கு தென்திருப்பூவணமே"
தேவாரம் – திருஞானசம்பந்தர் – திருப்பூவணம் – பாடல் 1
"கூரார் வாளி சிலையிற் கோத்துக் கொடிமதில் கூட்டழித்த
போரார் வில்லி மெல்லிய லாளோர் பால் மகிழ்ந் தானிடமா
மாரா வன்பிற் றென்னர் சேரர் சோழர்கள் போற்றிசைப்பத்
தேரார் வீதி மாட நீடு தென்திருப்பூவணமே"
தேவாரம் – திருஞானசம்பந்தர் – திருப்பூவணம் – பாடல் 5

20) மாணிக்கவாசகர் பாடிய திருத்தலம்
21) கருவூர்த் தேவர் திருவிசைப்பா பாடல் பெற்ற திருத்தலம்
22) அருணகிரி நாதர் திருப்புகழ் பாடல் பெற்ற திருத்தலம்
23) மதுரை சிவபெருமான் சித்தர் வடிவில் வந்து இரசவாதம் செய்து திருவிளையாடல் நடத்திய திருத்தலம்.
24) பொன்னனையாளுக்கு அருள் வழங்கிய திருத்தலம்.[1]
25) கோரக்க சித்தர் மற்றும் கத்தரிக்காய் சித்தர் முதலான சித்தர்கள் வாழும் சிவபூமி[2]

இவ்வாறு மிகவும் தொன்மைமிக்கதாகவும், அதிகச் சிறப்புகளுடையதாகவும் திருப்பூவணத் திருத்தலம் விளங்குகிறது. இங்கு சுயம்பாகத் தோன்றிய சிவலிங்கத்தின் அருமை பெருமைகளும், சௌந்தர நாயகித் தாயாரின் அன்பும், அருளும் எடுத்துக் கூறப் பெற்றுள்ளன.

*****

[1] பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணம் – இரசவாதம் செய்த படலம் – 36வது திருவிளையாடல்
[2] திருப்பூவணத்தில் கோரக்கச் சித்தர் குண்டலினி யோகத்தில் சீவசமாதியில் உள்ளார். இவரது கோயிலும் கத்தரிக்காய் சித்தரின் திருக்கோயிலும் உள்ளன.

# 2. அமைவிடமும் பெருமையும்

உலகெலாம் உணர்ந்து ஓதுதற்கரிய இறைவன் சிவன் தென்னாடுடையவராவார். "தென்னாட்டில் தொன்மையானது பாண்டிய நாடாகும்"[1]. பாண்டிய நாட்டின் பழம்பதியாக உள்ளது திருப்பூவணத் திருத்தலமாகும். முன்பு அனைத்து இலக்கியங்களிலும் திருப்பூவணம் என்று வழங்கப்பட்ட இத் திருத்தலம் பின்னர், திரிபுவனம் என்றும் திருப்பூவனம் என்றும் வழங்கப்பட்டு வந்துள்ளது. தற்போது திருப்புவனம் என்று அழைக்கப்படுகிறது.

மதுரையை ஆண்ட மலயத்துவச பாண்டியனுக்கும், காஞ்சனமாலைக்கும் மகளாய்ப் பிறந்த தடாதகைப் பிராட்டியார் (மீனாட்சி அம்மையார்) கன்னிப் பருவத்திலே முடியணிந்து வெண்குடை நிழற்றமர்ந்து மனுநூல் வழியே தமது அரசியலை நடத்தியதால் பாண்டிநாடு **கன்னிநாடு**[2] என்றும், பாண்டியநாட்டின் "**திருமேனி**[3]" யாகத் திருப்பூவணம்

---

[1] "பாண்டிய நாடே பழம்பதியாய் கொண்டோய் போற்றி" – திருவாசகத்திரட்டு பாடல்வரி எண் – 17

[2] "ஒப்புரு முதலீ(று) இல்லா ஒருத்திதன் சத்தி பெற்ற
முப்பெருந் தேவ ராலே முத்தொழில் நடாத்தும் என்று
செப்பலும் புகழன்(று) என்னில் தென்னவன் **கன்னி** யாகி
இப்புவி மனுவிற் காக்கும் என்ப(து) என் பேதை மைத்தே" –
பரஞ்சோதி முனிவர் அருளிய திருவிளையாடற் புராணப் பாடல்

[3] "கொங்கை யேபரங் குன்றமுங் கொடுங்குன்றும், கொப்பூழ்
அங்க மேதிருச் சுழியல், அவ் வயறுகுற் றாலம்,

விளங்குகிறது என்றும் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. விராட்புருடனின் (வாஸ்து பூதத்தின்) முகமண்டலமாகத் திருப்பூவணம் விளங்குகின்றது எனத் திருப்பூவணப்புராணத்தில் கூறப்பெற்றுள்ளது.[1]

## தலஇருப்பிடம்

திருப்பூவணம் தற்போது திருப்புவனம் என்று அழைக்கப்படுகிறது. வைகையாற்றின் தென்கரையில் மதுரை–இராமேசுவரம் தேசிய நெடுஞ்சாலையில் மதுரையிலிருந்து 18 கி.மீ. தூரத்தில் உள்ளது. சிவகங்கை மாவட்டத்தில், மானாமதுரை வட்டத்தில் பேரூராட்சியாக உள்ளது.

## சாலை வழி




---

செங்கை ஏடகம், மேனியே பூவணம், திரள் தோள்
பொங்கர் வேய்வனம், திருமுகம் மதுரையாம் புரமே"

[1] அண்டமோர்விராட்புருடன்றனங்கமாம்
புண்டரீகத்திருப்பொருந்தும்பூவணங்
கொண்டபேரெழில்குடிகொண்டவன்முக
மண்டலமாகவேமறைந்துவைகுமால் – திருப்பூவணப் புராணம், மணிகன்னிகைச்சருக்கம், பாடல்–7

திருப்புவனத்திலிருந்து கிழக்கே 22 கி.மீ. தூரத்தில் சிவகங்கையும். தென்கிழக்கே 20 கி.மீ. தூரத்தில் மானாமதுரையும். மேற்கே 25 கி.மீ. தூரத்தில் திருப்பரங்குன்றமும். வடமேற்கே 18 கி.மீ. தூரத்தில் மதுரையும். தெற்கே 35 கி.மீ. தூரத்தில் திருச்சுழியும். வடக்கே 15 கி.மீ. தூரத்தில் (மாணிக்கவாசகர் பிறந்த) திருவாதவூரும் உள்ளன. (திருவாதவூர் அருகில் 108 வைணவத்திருத்தலங்களில் ஒன்றான திருமோகூர் உள்ளது). இவ்விடங்களிலிருந்து பேருந்துகள் வழியாகத் திருப்புவனத்தை எளிதில் அடையலாம்.

மதுரை மாட்டுத்தாவணிப் பேருந்து நிலையத்திலிருந்து சுமார் அரைமணி நேரத்தில் திருப்புவனத்தை அடையலாம். மானாமதுரை. பரமக்குடி. கமுதி. இராமநாதபுரம். இராமேசுவரம் செல்லும் அனைத்துப் பேருந்துகளும் திருப்புவனம் வழியாகச் செல்கின்றன.

மதுரை பெரியார் பேருந்து நிலையத்திலிருந்து இவ்வூருக்கு நகரப்பேருந்துகள் அதிகம் உள்ளன. மானாமதுரை. சிவகங்கை. திருவாதவூர் ஆகிய ஊர்களிலிருந்தும் நகரப்பேருந்துகள் உள்ளன. இவ்விடங்களிலிருந்து நகரப்பேருந்தில் திருப்புவனத்தை அடைந்திடச் சுமார் 1மணி நேரமாகும். திருப்புவனத்தில் 'கோட்டை' பேருந்து நிறுத்தத்திற்கு மிக அருகில் (சுமார் 200மீ) திருக்கோயில் உள்ளது.

திருப்புவனத்தின் வடக்கே வைகையாறு ஓடுகிறது. ஆற்றின் வடகரையில் உள்ள மடப்புரம்-காளிஅம்மன் கோயில் தற்போது மிகவும் பிரசித்தி பெற்று விளங்கிவருகிறது. இதனால். மதுரை பெரியார் பேருந்து நிலையத்திலிருந்து மடப்புரத்திற்குத் தினமும் அதிகமான எண்ணிக்கையில் நகரப் பேருந்துகள் இயக்கப்படுகின்றன. குறிப்பாக வெள்ளிக்கிழமைகளில் மிகவும் அதிகமான எண்ணிக்கையில் நகரப் பேருந்துகள் இயக்கப்படுகின்றன. இவற்றில் பயணம் செய்தும் திருப்புவனத்தை எளிதில் அடையலாம். மடப்புரம் செல்லும் நகரப் பேருந்தில் வருவோர். 'திருப்புவனம் சந்தை' பேருந்து நிறுத்தம் எனக்கேட்டு இறங்க வேண்டும். அங்கிருந்து சுமார் 200 மீட்டர் தூரத்தில் திருக்கோயில் உள்ளது. அல்லது மடப்புரம் காளிகோயில் நிறுத்தத்திற்கு முன்னால் உள்ள "ஆடித்தபசு" மண்டபத்தில் இறங்கி ஆற்றின் வடகரையிலிருந்தபடியே தென்கரையில் கோயில் கொண்டிருக்கும் பூவணத்து ஈசனை வழிபடலாம்.

## இருப்புப் பாதை வழி

மதுரையிலிருந்து இராமேசுவரம் செல்லும் இருப்புப் பாதை திருப்புவனம் வழியாகச் செல்கிறது. எனவே தொடர்வண்டியில் வருவோர் மதுரையிலிருந்து இராமேசுவரம்

செல்லும் வழியில் சுமார் ஒரு மணிநேரப் பயணத்தில் திருப்புவனத்தை அடையலாம். இராமேசுவரத்திலிருந்து மதுரை செல்வோர், மதுரைக்கு முன்னால் திருப்புவனத்தில் இறங்கி இறைவனை வழிபட்டுச் செல்லலாம். தொடர்வண்டி நிலையத்திலிருந்து திருக்கோயில் சுமார் அரை கி. மீ. தூரத்தில் உள்ளது.

## விமான வழி

வெளிநாட்டிலிருந்தும், உள்நாட்டிலிருந்தும் திருப்பூவண நாதரைத் தரிசிக்க வரும் பக்தர்கள் மதுரை விமானத்தளத்தில் இறங்கித் தரைவழிப் போக்குவரத்து மூலம் திருப்புவனத்தை அடையலாம். இன்றளவும் வெளிநாட்டுப் பக்தர்கள் மதுரை ஈசனைத் தரிசித்துவிட்டுத் திருப்புவனம் வந்து வழிபட்டுச் செல்கின்றனர்.

## புவியியல் அமைப்பு

புவியியல் அமைப்பினை அடிப்படையாகக் கொண்ட வாஸ்து இலக்கணப்படி, பாண்டிய நாட்டின் வாஸ்து முகமண்டலமாக விளங்குகிறது திருப்பூவணத் திருத்தலம். தற்போதைய அறிவியல் முறையில், ஓர் இடத்தின் இருப்பிடத்தை பூமத்திய ரேகைக்கு இணையான அட்சரேகைக் கோடுகளாலும், வடதுருவம் மற்றும் தென்துருவம் இரண்டையும் இணைக்கும் தீர்க்கரேகைக் கோடுகளாலும் கணக்கிடுகின்றனர். இதன்படித் திருப்பூவணம் பூமத்திய ரேகையிலிருந்து 9.49பாகை வடஅட்சரேகையிலும், 78.15பாகை கிழக்குத் தீர்க்கரேகையிலும் **(9°49'19.26"N....78°15'20.55"E)** அமைந்துள்ளது[1].

## மக்கள் தொகை

1971–ம் ஆண்டின் மக்கள் தொகைக் கணக்கெடுப்புப்படித் திருப்புவனத்தின் மக்கள் தொகை 10226 ஆகும்.[2] கிராமமாக இருந்த திருப்புவனம் 1888ம் ஆண்டு திருப்புவனம் பஞ்சாயத்தாக தரம் உயர்வு பெற்றுள்ளது. 1991ல் மக்கள் தொகை 18400ஆகும். பத்தாண்டுகளுக்குப் பின்னர் 2001ம் ஆண்டின் கணக்கெடுப்புப்படி மக்கள் தொகை 21400ஆகும். 2004ம் ஆண்டில் மக்கள் தொகை சுமார் 22,700ஆக இருக்குமென உலகப்

[1] http://www.gazetteer.de/d/d in tn.htm

[2] The Government of Tamil Nadu District Gazetteers, Ramanathapuram, Year 1972. Page No.983.

புள்ளிவிவரங்களடங்கிய இணையதளத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது[1].

திருப்புவனத்திற்கு 26-11-1951ம் நாள் முதல் மின்சார இணைப்பு வழங்கப்பட்டுள்ளது.[2]

## தலத்தின் பிற பெயர்கள்

"கிரேதாயுகத்திலே 'தேவிபுரம்', 'புட்பவனம்' என்றும், திரேதாயுகத்திலே 'இலக்குமிபுரம்' என்றும், துவாபரயுகத்திலே 'பிரம்மபுரம்' என்றும், கலியுகத்திலே பாஸ்கரபுரம், ஆனந்தவனம், முத்தியாச்சிரமம், இரகசியசிதம்பரம், தட்சிணகாசி, சதுர்வேதபுரம், பிதிர்முத்திபுரம் என்றும் பல்வேறு பெயர்களால் பல்வேறு காலங்களில் இத்திருத்தலம் அழைக்கப் பெற்றிருக்கிறது"[3]. "பண்டைத் தமிழிலக்கியங்களில் இத்தலம் 'திருப்பூவணம்' என்றே குறிப்பிடப்படுகிறது"[4]. ஆனால், தற்போது, 'திருப்புவனம்' என்று வழங்கப்பட்டு வருகிறது.

---

[1] http://www.gazetteer.de/d/d in tn.htm

**The World Gazetteer : Tamil Nadu India 2004 : Cities and Places**

(Population in 1000)

| Rank Place | Population 1991 | Population 2001 | Population 2004 | Latitude | Longitude |
|---|---|---|---|---|---|
| 2242 | 18.4 | 21.4 | 22.7 | 9.83° N | 78.2° E |

[2] The Government of Tamil Nadu District Gazetteers, Ramanathapuram, Year 1972. Page No.984.

[3] கந்தசாமிப்புலவர், திருப் பூவணப் புராணம், சூரியன் பூசனைச் சருக்கம்

[4] மூவர் தேவாரம், திருவாசகம், தேவர் திருவிசைப்பா, திருப்புகழ் மற்றும் கந்தசாமிப்புலவர் இயற்றிய திருப்பூவண நாதர் உலா ஆகிய தமிழ்நூல்கள் அனைத்திலும் 'திருப்பூவணம்' என்றே குறிப்பிடப்பட்டுள்ளது.

## திருப்பூவணம் பெயர்க்காரணம்

*"வட சொற்கிளவி வட எழுத்து ஒரீஇ*
*எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே"*[1]

என்ற தொல்காப்பிய இலக்கணத்திற்கு ஏற்ப வடமொழியில் புஷ்பவனம் என்ற சொல் தமிழில் புட்பவனம் என்று வழங்கப்பட்டு, காலப்போக்கில் புவனம் என்றாகி, பின்னர் திரு எனும் அடைமொழியுடன் சேர்க்கப்பட்டு 'திருப்புவனம்' என்று அழைக்கப்பட்டிருக்கலாம்.

'ஆவணம்', 'கோவணம்', 'காவணம்' போன்ற சொற்களைப் போன்று 'பூவணம்' என்ற சொல்லாட்சியும் உருவாகியிருக்கலாம்.

திருப்பூவணம் என்பதை திரு + பூ + வணம் என்று பிரிக்கலாம். 'வணம்' என்ற சொல்லிற்கு உதயானம், ஓசை, பலகறை, வநம் எனப் பல்வேறு பொருள்கள் தமிழ்மொழி அகராதியில் கூறப்பட்டுள்ளன.

பல துறைகளையுடைய வைகை ஆற்றின் கரையினிலே பூ மரங்கள் நிறைந்த வனத்தில், புட்பவனத்தில், இறைவன் தானே விரும்பி இலிங்கவடிவாய் உமையம்மை வளர்த்த பாரிசாத மரத்தின்கீழ்த் தோன்றினார். பொதுவாகச் சிவலிங்கங்கள் கல்லினால் ஆனவைகளாக இருக்கும். ஆனால், திருப்பூவணத்தில் உள்ள சிவலிங்கமானது, பாரிசாத மரத்தினடியில் பூவாக உதித்த காரணத்தினால் **பூவணன், பூவணநாதர்** என்ற காரணப் பெயர்கள் ஏற்பட்டுள்ளன. இதனால் ஊருக்கு **திருப்பூவணம்** என்ற பெயர் ஏற்பட்டுள்ளது.

திருப்புவனத்தில், வைகை ஆற்றின் தென்கரை நெடுகிலும் ஆறு பல கால்வாய்களாய்ப் பிரிந்து ஓடுகிறது. அவற்றின் மத்தியிலே, பூ மரங்கள் சூழ்ந்த நந்தவனத்தில் கோயில் இருந்திருக்கிறது. இதனைத் திருஞானசம்பந்தர்

*"வண்டொரு போதமர் பொழிலணி பூவணம்."*
*"வண்டொடு தேனணி பொழிற்றிருப் பூவணம்",*
*"குருந்தொடு மாதவி கோங்கு மல்லிகை*
*பொருந்திய பொழில் திருப்பூவணம்",*
*"வெறிகமழ் புன்னைபொன் ஞாழல் விம்மிய*
*பொறியார் வணிபொழில் பூவணம்",*
*"வண்டமர் வளர்பொழில் மல்கு பூவணம்"*

என்று குறிப்பிடுவதால் அறியலாம்[1]. திருநாவுக்கரசு நாயனார் தமது பதினொரு பாடல்களையும் "பொழில் திகழும் பூவணத்தெம்

[1] தொல் காப்பியம், எச்சவியல் நூற்பா எண்.884

புனிதனார்க்கே"[2] என்று முடித்துள்ளார். பொழில் என்றால் பூஞ்சோலை என்று பொருள். இதனாலும் பூக்கள் நிறைந்த பல படித்துறைகளை உடையதால் பூவணம் என்ற காரணப் பெயர் ஏற்பட்டிருக்கவேண்டும்.

*"மருதா சிருங்கோங் ககின்மாஞ் சாடி*
*வரைவளங் கவர்ந்திழி வைகைப்*
*பொருதிரை மருங்கோங் காவண வீதிப்*
*பூவணங் கோயில்கொண்டாயே"*

.......

*தேம்புனற் பொய்கை வாளைவாய் மடுப்பத்*
*தெளிதரு தேறல் பாய்ந் தொழுகும்*
*பூம்பணைச் சோலையாவண வீதிப்*
*பூவணங் கோயில்கொண் டாயே"*

என்றும் கருவூர்ச் சித்தர் பாடியுள்ளார்[3].

இதனால் மருது, ஆரசு, இருங்கு, கோங்கு, அகில் முதலிய மரங்களும் மற்றும் தேனொழுகும் பூக்களும் நிறைந்த வனத்தில் வைகையாற்றின் கரையில் உள்ள வீதியில் கோயில் இருந்தமை சுட்டப் பெற்றுள்ளது.

பூவனத்தின் இடையே இறைவன் எழுந்தருளியுள்ளதால் 'புட்பவனநாதர்' என்றும் பெயர் பெற்றார். இதனால் ஊர்ப் பெயர் 'புட்பவனம்' (புஸ்பவனம்) என்றானது.

பிதுர்களுக்கு (முன்னோர்களுக்கு) முத்தி அளிப்பதனால் 'பிதுர்மோட்ச புரி' என்ற காரணப் பெயர் ஏற்பட்டது. பிரமன் வந்து வழிபட்ட இடமானதால் 'பிரமபுரி' என்றானது. தன்னை நோக்கித் தவம் புரிந்த முனிவர்களுக்கு "திரு ஐந்தெழுத்து" மந்திரத்தை உபதேசித்து அவர்களது இதயங்களிலேயே ரகசியமாக நடனமாடியருளியதால் 'இரகசிய சிதம்பரம்' என்ற பெயர் உண்டானது. காசியிலும் சிறப்புப் பெற்றதால் 'திருப்பூவணக்காசி' என்ற பெயர் ஏற்பட்டது. சூரியன் (பாஸ்கரன்) வந்து வழிபட்டதால் 'பாஸ்கர சேத்திரம்' என்ற பெயர் ஏற்பட்டது.

## திருப்பூவணம் திருப்புவனமானது

மூவர் தேவாரம், திருவாசகம், திருப்புகழ், கருவூர்த் தேவர் திருவிசைப்பா, மற்றும் கந்தசாமிப்புலவர் இயற்றிய திருப்பூவணநாதர் உலா முதலிய அனைத்து இலக்கியங்களிலும்

---

[1] தேவாரம், ஒன்றாம் திருமுறை, திருஞானசம்பந்தர் அருளிய திருப்பூவணப் பதிகம், பாடல்கள் 1–11

[2] தேவாரம், திருநாவுக்கரசர் அருளிய திருப்பூவணப் பதிகம்.

[3] ஒன்பதாம் திருமுறை, கருவூர்த் தேவர் திருவிசைப்பா, பாடல்கள் எட்டும்.

இந்நகர் திருப்பூவணம் என்றே பாடப்பெற்றுள்ளது. ஆனால் கந்தசாமிப்புலவர் தமிழில் மொழிபெயர்த்துப் பாடிய திருப்பூவணப் புராணம் என்ற நூலில் சிற்சில இடங்களில் புட்பவனம் என்றும் திருப்பூவனம் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

"ண"கரம் "ன"கரமாகத் திரிந்து திருப்பூவணம் என்பது பூக்கள் நிறைந்த காடு (வனம்) என்னும் பொருள்படத் திருப்பூவனம் என மாறிப் பின்னர் திருப்புவனமாக மாறியிருக்க வேண்டும் என்றும் கூறுவர்.

திருப்பூவணம் → திருப்பூவனம் → திருப்புவனம்

அல்லது ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் ஊர்ப் பெயர்கள் ஆங்கிலத்தில் எழுதப்பட்ட காலத்தில் திருப்பூவணம் என்பதை ஆங்கிலத்தில் "Tiruppuvanam" என்று எழுதப்பெற்று பின்னர் வாசிக்கும் காலத்தில் திருப்புவனம் என்று மாறியிருக்க வேண்டும்.

## இதே பெயரில் உள்ள மற்ற ஊர்கள்

பாண்டியநாட்டின் வடபகுதியில் உள்ள இத்திருப்பூவணம் நால்வர் பாடலும் பெற்றுச் சிறப்புடன் விளங்கிவருகிறது. இவ்வூரைப் போலத் தங்களது ஊரும் சிறக்கவேண்டும் என்ற எண்ணத்தில் "தென்பாண்டி நாடெனப்படும் நெல்லை நாட்டில் மற்றொரு திருப்பூவணம் உண்டாயிற்று. திருநெல்வேலிக்கு அருகில் உள்ள இந்த ஊரைத் 'தென்திருப்பூவணம்' என்றார்கள். முள்ளி நாட்டுத் தென்திருப்பூவணம் என்று சாசனத்திற் குறிப்பிடுகின்றனர். இவ்வூர், தென்திருப்புவனம் என்னும் பெயரோடு அம்பாசமுத்திர வட்டத்தில் உள்ளது. இங்குள்ள திருக்கோயிலும் புஷ்பவனேஸ்வரம் என்றே வழங்குவதாகும்"[1]. இச் செய்தி கல்வெட்டு ஒன்றில் உள்ளது.[2]

[1] ரா.பி. சேதுப்பிள்ளை, தமிழகம் ஊரும் பேரும்.பக்கம் 293 மற்றும் 294 (No. 475 of the Madras Epigraphical Collection fro 1916 ; T.A.S. Vol. 1Z, P.25)
பதிப்பகத்தார் – பழனியப்பா பிரதர்ஸ்
2

**No. 172.**
**(A. R. No. 473 of 1929-30.)**
**Attur, Tiruchchendur Taluk, Tirunelveli District.**

## திருபுவனம்

திருப்புவனம் என்றில்லாமல், பகர ஒற்றுமிகாமல், திருபுவனம் என்ற பெயரில் கும்பகோணத்திற்கு அருகே ஒரு சிவத்தலம் உள்ளது. இங்கு 'சரபேசுவரர்' வழிபாடு சிறப்பாக நடைபெறுகிறது. சரபேசுவரர் சந்நிதி உள்ள கோயில்கள் மிகக் குறைவாகும். அவற்றுள் தொன்மையானதாகவும், சிறப்பானதாகவும் உள்ளது திருபுவனம் திருக்கோயில். இவ்வூர் பட்டு நெசவிற்குப் பெயர் பெற்றது. சோழ நாட்டில் தஞ்சைப் பகுதியில் திருப்புவனம் என்று சொன்னால் அனைவரும் கும்பகோணத்திற்கு அருகில் உள்ள திருபுவனம் என்ற இவ்வூரையே கருத்திற் கொள்கின்றனர். எனவே மதுரைக்கு அருகில் உள்ள திருப்புவனம் என்று தெளிவாகக் கூற வேண்டியுள்ளது.

எனவே தலப்பெயரில் திரிபு ஏதுமின்றித் தமிழ்ப் பக்தி இலக்கியங்களில் உள்ளபடி திருப்பூவணம் என்று அழைப்பதே சிறப்புடையதாகும்.

## ஊரின் உட்பிரிவுகள்

திருப்பூவணத் திருத்தலம் கோட்டை, நெல்முடிகரை, பழையூர், புதூர் என்ற நான்கு பகுதிகளை உள்ளடக்கியதாக அமைந்துள்ளது.

கோட்டை என்ற பகுதியில் தான் திருக்கோயில் அமைந்துள்ளது. இங்கு தொன்மைக்காலங்களில் உயரமான

---

**On a stone in the pavement of the amma shrine in the Somanathesvara temple.**

This inscription dated in the 21st year of Jatavarman Sundara-Cholapandya is damaged at the end. It registers some gift made by Lokaditta-kkuttan of the Bharadvaja-gotra, a resident of Arrur-Sendamangalam for burning a lamp in the temple of Somanathesvara alias Ten-Tiruppuvanamudaiyar at Arrur-Sendamangalam, a brahmadeya in Kuda-nadu, a subdivision of Uttamasola-valanadu. Ten-Tiruppuvanam must have been so named after the god of the same name in the Ramanathapuram district. (Now in Sivaganga district.)
http://www.whatisindia.com/inscriptions/south_indian_inscriptions/volume_14/stones_151_to_175.html

மதில்களாலான கோட்டை இருந்திருக்கிறது. இதனைப் "பொன்மதில் சூழாலயஞ் சேர் பூவணத்தின் வளம் யாவர் புகலற்பாலார்"[1] என்று கந்தசாமிப்புலவர் சுட்டுவர். வங்கிய சேகர பாண்டிய மன்னன் தன் தலைநகராகிய மதுரையின் எல்கைகளைக் காட்டியருளுமாறு இறைவனிடம் வேண்டினான். சித்தமூர்த்தியாக, இறைவன் எழுந்தருளித் தன்திருக் கையில் கட்டியிருந்த நஞ்சுடைய பாம்பை ஏவி மன்னனுக்கு மதுரையின் எல்லைகளைக் காட்டு எனக் கட்டளையிட்டான். ஆலவாயுடைய பாம்பும் கிழக்கு எல்லையாகத் திருப்பூவணத்தைக்காட்டியது. மன்னன் இந்த எல்லையின் வாயிலில் சக்கரவாள மலையை அடியோடு தோண்டி எடுத்து வைத்தது போன்று, முகில் தவழும்படியான பெரிய மதிலை அமைத்தான். மதுரைக்குக் கிழக்கில் சோலைகள் சூழ்ந்த திருப்பூவண நகரானது எப்போதும் எல்லையாக இருக்கும்படி அம்மதில்களை அமைத்தான். அந்த உயரமான, நீண்ட மதிலை "ஆலவாய் மதில்" என்று கூறுவர். இவ்வாறு மதுரைமாநகரக் கிழக்கு வாயிலாகக் கோட்டை அமைந்த இடம் திருப்பூவணமாகும். இதனை "குணபாற் பொன்ற லங்கிழித் தெழுபொழிற் பூவண நகரும் என்ற நாற்பெரு வாயில்கட்கு எல்லையா கூத்தான்"[2], என்று திருவிளையாடற் புராணத்தில் பரஞ்சோதி முனிவர் குறிப்பிட்டுள்ளார். அன்று கோட்டை இருந்த இடமே இன்று கோட்டை என்று அழைக்கப்படுகின்ற பகுதியாகும். தற்காலத்தில், கோட்டை இருந்த இடமெல்லாம் குடியிருப்புகளாக மாறிவிட்டன.

நெல்முடிகரை என்னும் பகுதி விவசாயத் தொழிலில் சிறந்து விளங்கி வருகிறது. பொன்விளையும் பூமி, நெல் மணிகள் அதிகமாக விளையும் பகுதி. நெல்முடிகரை என்பதற்குப் பெயர்க்காரணம் கூறும்போது சோமலே அவர்கள் "பாண்டிய அரசனுக்குத் திருப்பூவண மக்கள் நெல்லால் கோட்டை கட்டி, கதிரையெடுத்து முடிசூட்டிவைத்தனர். அதனால் இவ்விடம் இப்பெயர் பெற்றது"[3] என்று குறிப்பிடுவர்.

பழையூர் என்னும் பகுதியே மிகவும் பழைமையான மூதூராகும். இப்பகுதில் மக்கள் யுகயுகமாய் வாழ்ந்து

[1] கந்தசாமிப்புலவர், திருப்பூவணப் புராணம், திருநகரச் சருக்கம், நான்காம் பாடல். (ப. 28)

[2] பரஞ்சோதி முனிவர் அருளிய திருவிளையாடற் புராணம், பாடல் எண் 2345 மற்றும் 2346

[3] சோமலே – இராமநாதபுரம் மாவட்டம் பக்.342

வருகின்றனர். இதனால் இப்பகுதிக்கு 'பழையூர்' என்ற காரணப் பெயர் வழங்கி வருகிறது.

**புதூர்** – கோட்டைக்குக் கிழக்கே சுமார் 1 கி.மீ. தூரத்தில் புதூர் பகுதி உள்ளது. இப்பகுதியில் மாரியம்மன் கோயிலும், தென்னிந்திய திருச்சபைத் தேவாலயமும் (C.S.I. Church) உள்ளன. புதூரில் கோபாலகிருஷ்ணன் கோயில் மற்றும் மசூதிகள் உள்ளன. இவ்வாறு பல்வேறு சமயத்தைச் சார்ந்த கோயில்கள் இப்பகுதியில் இடம்பெற்றுள்ளன. கோட்டை, நெல்முடிகரை, பழையூர் என்ற மூன்று பகுதிகளும் தோன்றிய பின்னர் புதிதாக இவ்வூர் தோன்றியதால் இதற்குப் புதூர் என்ற பெயர் உண்டாகியுள்ளது.

## திருத்தலத்தின் பெருமைகள்

அன்னைபூமி பாரதம் ஆன்மிகத்தால் பெருமை பெற்றது. கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்று கூறுவர். திருப்பூவணத்தில் ஊரெல்லாம் கோயில்களாக உள்ளன. திசைகளெங்கும் தீர்த்தங்கள் உள்ளன. தரையெங்கும் விருட்சங்கள் முளைத்துள்ளன. இவ்வகையில், தலம், மூர்த்தி, தீர்த்தம், விருட்சம் என்று அனைத்தும் சிறப்புற்றுத் திகழ்கின்றன. இங்குள்ள கோயில்களையும் அவற்றில் வீற்றிருந்து அருளும் தெய்வங்களின் பெருமைகளையும் காண்போம்.

### மூலலிங்கம்

திருப்பூவணத்தில் மிகவும் பூர்வமானது திருப்பூவண நாதர் சுயம்புலிங்கமாகும். சிவபெருமான், சிவலிங்கவடிவில் காட்சியளிக்கும் திருத்தலங்களை ஐந்து வகைகளாகப் பிரிக்கலாம்.

1. ஈசன் தானே விரும்பி சிவலிங்கமாக எழுந்தருளிய (சுயம்பு லிங்கங்கள் உடைய) திருத்தலங்கள் முதலாவதாகும்.
2. மற்றபிற தெய்வங்கள், தேவர், விண்ணோர், கந்தர்வர் முதலானோர் சிவலிங்கம் வைத்து வணங்கி வழிபட்டது இரண்டாவதாகும்.
3. இறைவனின் பிரதிநிதியாக மக்களை ஆண்ட மன்னர்கள் சிவலிங்கம் வைத்து வணங்கி வழிபட்டது மூன்றாவதாகும்.
4. மற்றபடி மக்கள் தங்களது வழிபாட்டிற்காகச் சிவலிங்கங்களை வைத்து வழிபடுபவை நான்காவதாகும்.
5. இவைகள் தவிர அஃறிணை உயிரினங்கள் வழிபட்ட சிவலிங்கங்களும் உண்டு. அவை ஐந்தாவது வகையாகும்.

இந்த ஐந்து பெருமைகளுமே திருப்பூவணநாதருக்கு (மூலலிங்கத்திற்கு) உண்டு. இங்கு,

1) அன்னை ஆதிபராசக்திக்கு வரமளிக்க வேண்டி ஈசன், சுயம்புலிங்கமாக எழுந்தருளினார். மேலும், சித்தர் வடிவில் சிவபெருமான் எழுந்தருளி இரசவாதம் செய்துள்ளார்.
2) மகாவிஷ்ணுவும், மகாலெட்சுமியும், பிரமனும் மற்றும் சூரியனும் இங்கு வந்து சிவலிங்கத்தை வழிபட்டு வரங்கள் பலபெற்றுப் பயன் அடைந்துள்ளனர்.
3) சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் ஞானசம்பந்தர் காலத்திலும்[1], சுந்தரர் காலத்திலுமாக[2] காலங்காலமாக இத்திருத்தலத்திற்கு ஒன்று சேர்ந்து வந்து சிவலிங்கத்தை வழிபட்டுள்ளனர். அப்பர், சுந்தரர், திருஞான சம்பந்தர், மாணிக்கவாசகர் ஆகிய நான்கு சமயக்குரவர்களும் அருணகிரிநாதரும், கருவூர்த் தேவரும் இத்திருத்தலம் வந்து இறைவனை வழிபட்டுப் பதிகம் இயற்றியுள்ளனர்.
4) வைகை ஆற்றுப் பள்ளத்தாக்கில் மனிதன் வாழத்துவங்கி இறையுணர்வு பெற்ற காலந்தொட்டுப் பொதுமக்கள் இங்கு தங்களது முன்னோர்கள் நினைவாக சிவலிங்கம் வைத்து வழிபாடு செய்து வருகின்றனர்.
5) தாழம்பூ வழிபட்டுத் தனது பாவத்தைப் போக்கிக் கொண்டுள்ளது[3].

இவ்வாறாக அனைத்து உயிர்களுக்கும் அன்னையான பார்வதிதேவி முதல் அஃறிணை உயிரினமான தாழம்பூ வரை வணங்கி வழிபட்டுப் பலனடைந்த சிறப்புப் பெற்றது இத்திருத்தலம்.

## தலத்திலிருக்கும் பிற தெய்வங்கள்

திருப்பூவணத்தில் திருக்கோயில் தவிர மற்றைய இடங்களில் உள்ள தெய்வங்களும் அவற்றின் சிறப்புக்களும் கீழே குறிப்பிடப்பெற்றுள்ளன.

[1] சுந்தரர் தேவாரம் ஒன்றாம் திருமுறை, பாடல் எண். 1 மற்றும் 5

[2] www.saivam.com : kazarirraivAr nAyanAr – part II (friendship with the Lord's Friend) பெரியபுராணம், கழறிற்றறிவார் நாயனார் புராணம், பாடல் எண் 97,98,99 மற்றும் 100

[3] திருப்பூவணப் புராணம், சிதம்பரஉபதேசச் சருக்கம், பாடல் எண். 72–75

## விநாயகர் கோயில்

திருப்புவனத்தில் ஏராளமான பிள்ளையார் திருவுருவங்கள் உள்ளன. ஒவ்வொரு பிள்ளையாரும் ஒவ்வொரு விதத்தில் சிறப்புடையனவாகக் கூறப்படுகின்றன. ஆற்றின் கரையில் கோயிலுக்கு எதிரே இரண்டு பிள்ளையார்கள் உண்டு. ஆற்றின் வடகரையில் மடப்புரம் செல்லும் வழியில் ஆடித்தபசு மண்டபத்தில் இரண்டு பிள்ளையாரும், பிரம்ம தீர்த்தத்திற்கு அருகில் சித்தி விநாயகரும் (படம்). நெல்முடிகரையில் உள்ள ஸ்ரீ யக்ஞ விநாயகரும்[1], தொடர்வண்டி (Railway Station) நிலையம் அருகில் ஒரு பிள்ளையாரும், நரிக்குடி செல்லும் சாலையில் ரயில்வே கேட் (Railway Gate) அருகிலும், மாரியம்மன் கோயிலுக்குச் சற்று கிழக்கேயும், இன்னும் அதிகமான இடங்களிலும் பிள்ளையார் வீற்றிருந்து அருளுகிறார்.

## ஆற்றங்கரையில் விநாயகர்

ஆற்றங்கரையில் உள்ள அரசமரத்தடியில் கற்பக விநாயகர், மணிமந்திர விநாயகர், ஒட்டுக்கல் வெள்ளை விநாயகர் என்று போற்றிப் புகழப்படும் விநாயகர் வீற்றிருந்து அருளுகிறார். இவரை வணங்கிய பின்னரே ஆற்றங்கரையில் இறைவனின் திருவடி சேர்ந்த நமது முன்னோர்களுக்குச் செய்யப்படும் (பித்ரு) பூஜைகள் அனைத்தும் நடைபெறுகின்றன.

---

[1] இக்கோயிலுக்கு 12-5-2006 அன்று கும்பாபிஷேகம் நடைபெற்றுள்ளது.

## முருகன் கோயில்

திருப்பூவணநாதர் கோயிலின் வலப்புறத்தில் சுமார் 100 அடி தூரத்தில் முருகன் கோயில் உள்ளது.





திருப்பூவணம் முருகன் கோயில்

தற்போதுள்ள முருகன் கோயிலில், சில நூற்றாண்டுகளுக்கு முன்னர் சௌந்தரநாயகி அம்மன் வீற்றிருந்து

அருளியுள்ளார். 16ம் நூற்றாண்டின் இறுதியில் திருக்கோயிலின் பெரிய பிரகாரத்திற்கு உள்ளேயே அம்மன் கோயிலைக் கட்டி அங்கு சௌந்தரநாயகி அம்மனை எழுந்தருளச் செய்துள்ளனர். சௌந்தரநாயகி அம்மன் இருந்த கருவறை வெற்றிடமாக இருக்கவே அக்கருவறையில் சுப்பிரமணியர் திருவுருவத்தை நிறுவி வழிபட்டு வரலாயினர். அதுமுதல் அக்கோயில் 'முருகன் கோயிலாக' மாறிவிட்டது. ஆனால் இக்கோயிலில் அம்மன் வீற்றிருந்த காலத்தில், இங்கு ஒரு சிவலிங்கமும் இருந்திருக்கிறது. அச்சிவலிங்கம் அப்படியே அங்கேயே உள்ளது. இன்றும் முருகன் சந்நிதி அருகே உள்ள இச்சிவ லிங்கத்தை வணங்கி வழிபடலாம்.



## முருகன் கோயிலில் உள்ள சிவலிங்கம்

இவ்வாறு சில நூற்றாண்டுகளுக்கு முன்னர்வரை அம்மன் கோயிலாக இருந்தது தற்போது முருகன் கோயிலாக மாறியுள்ளது.



## பிள்ளையார் கோயில்

சுப்பிரமணியர் கோயிலுக்கு முன்னர் பிள்ளையார் கோயில் உள்ளது. முருகன் கோயிலானது முன்காலத்தில் அம்மன் கோயிலாக இருந்தது. அப்போது, இக்கோயிலுக்கு எதிரே மிகப்பெரிய அளவில் மணிகர்ணிகை தீர்த்தம் இருந்துள்ளது. தற்போது இத்தீர்த்தக்குளம் முற்றிலுமாக மூடப்பட்டுள்ளது. தீர்த்தம் இருந்த காலத்தில், தீர்த்தக்கரையில் இருந்த பிள்ளையாரே தற்போது முருகன் கோயில் வாயிலில் உள்ளார். (தீர்த்தம் மூடப்பெற்றுள்ள வரலாறு, துன்மனன் சருக்கத்திலே விரிவாகக் கூறப்பட்டுள்ளது).

## பெருமாள் கோயில்

முருகன் மற்றும் பிள்ளையார் கோயில்களை அடுத்தாற்போல் ஸ்ரீ பூமிநீளா ரெங்கநாயகி சமேத ஸ்ரீ அழகிய மணவாள ரெங்கநாதப் பெருமாள் கோயில் உள்ளது. இக்கோயில் 1888ஆம் ஆண்டு இராமசாமி என்பவரால் கட்டப்பெற்றதாகக் கோயில் சுற்றுச் சுவரில் கல்வெட்டு பதிக்கப்பட்டுள்ளது.



அழகிய மணவாள இரங்கநாதப் பெருமாள்

இப்பெருமாள் மேற்குத் திசைநோக்கி உள்ளார். இவ்வாறு பெருமாள் சிவலிங்கத்தை நோக்கி நிற்பது ஒரு தனிச்சிறப்புப் பெற்றதாகும். பூவணநாதர் கோயிலின் சுற்றுச்சுவர் எடுப்பதற்கு முன்னால் இப்பெருமாள் சிவலிங்கத்தைப் பார்த்தபடி இருந்திருப்பார்.

திருப்பதியில், வேங்கடவனை "ஸ்ரீவாரி" என்று குறிப்பிடுகின்றனர். "ஸ்ரீ" என்றால் "சீர் (செல்வம்)" என்று பொருள். திருப்பூவணத்தில், மகாலெட்சுமியுடன் பெருமாள் நின்றகோலத்தில் அருளுகிறார். இதனைத் திருஞானசம்பந்தப்

பெருமான் தனது பாடலில், "சீரார் வாரி சேர நின்ற தென் திருப்பூவணமே"[1] என்று பாடியுள்ளார்.

திருப்பூவணத்தில் கிடைத்த திருமழிசை ஆழ்வார் மற்றும் தொண்டரடிப் பொடியாழ்வார் செப்புத் திருமேனிகள், தற்பொழுது சென்னை அருங்காட்சியகத்தில் உள்ளன.[2]

| | |
|---|---|
| | திருமழிசை ஆழ்வார் செப்புத்திருமேனி ஒன்று (14ம் நூற்றாண்டு) திருப்பூவணத்தில் கிடைக்கப் பெற்றுள்ளது. உயரம் 49cm. சதுரபீடத்தின் மீதுள்ள பத்மாசனத்தில் திறந்த கண்களுடனும் கூப்பிய கரங்களுடனும் உள்ளார். |
| | தொண்டரடிப் பொடியாழ்வார் செப்புத்திருமேனி ஒன்று (15ம் நூற்றாண்டு) திருப்பூவணத்தில் கிடைக்கப்பெற்றுள்ளது. உயரம் 47cm. சதுரபீடத்தின் மீதுள்ள பத்மாசனத்தில் திறந்த கண்களுடனும் கூப்பிய கரங்களுடனும் உள்ளார். இடது கையில் பூக்கூடை உள்ளது. |

## திரௌபதி அம்மன் கோயில்

திருப்பூவணத்தில் தேசியநெடுஞ்சாலையிலிருந்து பூவந்தி என்ற ஊருக்குச் சாலை பிரியும் இடத்தில் திரௌபதி அம்மன் கோயில் உள்ளது.

---

[1] திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் பாடியது, 1-ம் திருமுறை, திருப்பூவணம், பாடல் எண் -3 (முழுப்பாடலும் இந்நூலின் பின்னிணைப்பில் உள்ளது)

[2] http://www.chennaimuseum.org/draft/gallery/01/05/054/vaish7.htm

## வீரபத்திர சுவாமி கோயில்

சிவபிரான் தனது நெற்றிக் கண்ணிலிருந்து வீரபத்திரக் கடவுளைப் படைத்தார். இவர், தட்சனின் சிரத்தை அறுத்து, அவனது வேள்வியையும் அழித்தார். இவரது கோயில் திருப்பூவணத்தில் தேர்முட்டி (தேர் நிறுத்தம்) யில் உள்ளது. இக்கோயிலின் இரண்டு பக்கங்களிலும் இரண்டு தேர்களும் நிறுத்தப்பெற்றுள்ளன.

## பொன்னனையாள் மண்டபம்

திருக்கோயிலின் இடப்புறத்தே கோட்டை இருந்துள்ளது. இவ்விடம் இன்றும் "கோட்டை மேடு" என்று அழைக்கப்படுகிறது. இப்பகுதியில் கோட்டைக் கோபுரத்தை அடுத்து பொன்னனையாள் வசித்த வீடு இருந்துள்ளது. வீடு இருந்த இடத்தில் மதுரைநாயக்க மன்னர் காலத்தில் "பொன்னனையாள் மண்டபம்" என்றும் "பொன்னனையாள் மடம்" என்றும் கட்டடங்கள் இருந்துள்ளன. இங்கே அன்னதானங்கள் நடைபெற்றுள்ளன. தற்போது இவ்விரு கட்டடங்களும் இடிந்துபோய்விட்டன. அவ்விடத்தில் குடியிருப்புகள் உள்ளன. 1961ம் ஆண்டு குடமுழுக்குவிழா நடைபெற்ற போது, பொன்னனையாள் மண்டபத்திலிருந்த சித்தர் திருவுருவம், **பொன்னனையாள் திருவுருவம், திருமலைநாயக்கர் மற்றும் அவரது துணைவியார் திருவுருவம், நாயக்கரின் முதலமைச்சரான சொக்கப்பநாயக்கர் மற்றும் அவரது துணைவியார் திருவுருவம்** ஆகியவற்றை மண்டபத்திலிருந்து அகற்றித் திருக்கோயிலின் உள்ளே கோபுரத்தின் அருகே நிறுவியுள்ளனர். தற்போது, இச்சிலைகள் அங்குதான் உள்ளன.

முன்பு பொன்னனையாள் மண்டபம் இருந்த இடத்திற்கு அருகில் திருமலைநாயக்கர் மகாலைப் போன்ற கட்டடம் ஒன்று உள்ளது. அதன் வடிவமைப்பைக் காணும் போது திருமலைநாயக்கர் வந்து தங்குவதற்காகக் கட்டப்பட்டது போன்று உள்ளது. இம் மண்டபம் இன்றும் உள்ளது. இம்மண்டபத்தின் படங்கள் கீழே உள்ளன. இம்மண்டபத்தைச் சீரமைக்கும் பணிகள் இந்நூலாசிரியரின் முயற்சியால் நடைபெற்று வருகின்றன. இம்மண்டபத்தைச் சுற்றி தற்போது குடியிருப்புகள் உள்ளன.

|  |  |
|---|---|
| பொன்னனையாள் மண்டபம் இருந்த இடத்திற்கு அருகில் உள்ள திருமலைநாயக்கர் மண்டபம், தற்போது சிதிலமடைந்த நிலையில் உள்ளது. (உயரத்தில் இருந்து எடுக்கப் பெற்ற படம்.) | அதே மண்டபம் பக்கவாட்டிலிருந்து எடுக்கப்பட்ட படம். இம்மண்டபம் சுமார் பத்துஅடி நீளமும் பத்து அடி அகலமும் கொண்டது. |

## முத்து மாரியம்மன் கோயில்

திருப்பூவணக் கோட்டைக்கும் புதூருக்கும் இடையே பழைமையான மாரியம்மன் கோயில் உள்ளது. 11-02-2001-ம் ஆண்டு இக்கோயில் முற்றிலுமாகப் புதுப்பிக்கப்பட்டுக் குடமுழுக்கு விழா நடைபெற்றுள்ளது. அம்மன் திருமேனி மற்றபிற தெய்வங்களின் திருமேனிகள் தவிர, கோயிலின் அனைத்துப் பகுதிகளும் முற்றிலும் புதிதாக மாற்றி யமைக்கப் பட்டுள்ளன. முளைப்பாரி, தீச்சட்டி எடுத்தல் போன்ற திருவிழாக்கள் காலங் காலமாகச் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.



## கோபால கிருஷ்ணன் கோயில்

புதூரில் சாலையின் தென்புறத்தில் மிகவும் பழமையான கோபாலகிருஷ்ணன் கோயில் உள்ளது. இங்கு உரியடித்தல், வழுக்குமரம் ஏறுதல் போன்ற வீர விளையாட்டுக்கள் திருவிழா நாட்களில் சிறப்பாக நடைபெறுகின்றன.

## சித்தர் கோயில்கள்



திருப்பூவணத்தில் கோரக்க நாதர் கோயில், மற்றும் கத்தரிக்காய்ச் சித்தர் கோயில் என இரண்டு சித்தர் கோயில்கள் உள்ளன.

கோரக்கநாதர் என்ற சித்தர் வட நாட்டிலிருந்து இங்கு வந்து குண்டலினி யோகத்தில் சீவசமாதியில் இருந்து அருள்செய்து கொண்டிருக்கிறார். இவரது கோயில், தேர்முட்டி என்று அழைக்கப்படுகிற தேர் நிறுத்தத்திற்கு அருகே உள்ளது. மலையாள நாட்டில் அருள்மிகு ஐயப்பசுவாமி குண்டலினி யோகத்தில் வீற்றிருந்து அருளுவது போல இச்சித்தரும் குண்டலினியோகத்தில் சீவ சமாதியாய் வீற்றிருந்து மக்களுக்கு அருளுகிறார்.

கத்தரிக்காய்ச் சித்தர் கோயில் தேசிய நெடுஞ்சாலையில் கோட்டைப் பேருந்து நிறுத்தத்திற்குக் கிழக்கே அரசுப் பொதுமருத்துவமனைக்கு எதிரே சாலையின் வடபுறத்தில் அமைந்துள்ளது. ஊர்ப் பொது மக்களும் குறிப்பிட்ட ஒரு சமூகத்தினரும் வணங்கி வருகின்றனர்.




திருப்பூவணத்தில் கோயில் அமைப்பு

1 வீதி
2 முருகன் கோயில்
3 பிள்ளையார் கோயில்
4 பெருமாள் கோயில்
5 அடைக்கப்பட்டுவிட்ட தெற்கு வாயில்
6 மணிகன்னிகா தீர்த்தம்
7 அம்மன் சந்நிதி நுழைவாயில்
8 வீதி
9 இராச கோபுரம்
10 மொட்டைக் கோபுரம்

## மடப்புரம் காளி கோயில்

திருப்புவணம் கோயிலின் வாயிலில் வைகை ஆறு ஓடுகிறது. கோயிலுக்கு நேர் எதிரே ஆற்றின் மறுகரையில் ஆடித்தபசு மண்டபம் உள்ளது. இம்மண்டபத்திற்குக் கிழக்கே சிறிது தொலைவில் மடப்புரம் என்ற கிராமம் உள்ளது. இங்கு அடைக்கலம் காத்த அய்யனார் கோயில் இருக்கிறது. இக் கோயிலின் உள்ளே மிகவும் பிரசித்தி பெற்ற மடப்புரம் **காளியம்மன்** சந்நிதி உள்ளது. இக்காளிக்கு அடைக்கலம் கொடுத்துக் காத்ததனால் '**அடைக்கலம் காத்த அய்யனார்**' என்ற காரணப் பெயர் இங்குள்ள ஐயனாருக்கு ஏற்பட்டுள்ளது. பொதுவாக அனைத்து ஐயனார் கோயில்களிலும் காளியானது பரிவாரத் தெய்வமாக இருக்கும். இங்கும் அவ்வாறே இருப்பினும், மடப்புரம் காளியே பிரசித்திபெற்று மக்களால் வணங்கி வழிபாடு செய்யப்படுகிறாள்.

**நரபலி** – காளிக்கு நரபலி கொடுப்பது என்பது மிகவும் தொன்மையான வரலாற்றுச் செய்தியாகும். தங்களைத் தாங்களே பலியிட்டுக் கொள்வதற்கு "**நவகண்டம் கொடுத்தல்**" என்று பெயர். இக் கோயிலில் இரண்டு இளைஞர்கள் சிரித்த முகத்துடன் மண்டியிட்டுத் தங்களது தலையைத் தாங்களே வாள் கொண்டு வெட்டி பலியிட்டுள்ளனர். இவர்களது உருவங்கள் தனித்தனியாக இரண்டு சிற்பங்களாக உள்ளன. இச்சிற்பங்கள் மிகவும் பழமையானவை. தற்போது இச்சிற்பங்கள் அடைக்கலம் காத்த ஐயனார் கோயிலின் சந்நிதியின் இரண்டு புறங்களிலும் உள்ளன.

மடப்புரம் காளியம்மனுக்கு மேற்கூரை இல்லை. வெட்டவெளியில் உள்ள செவ்வக பீடத்தின் மேலே, கால்களைத் தூக்கிப் பாயும் குதிரையின் கீழே பூதகணங்களுடன் காளியம்மன் நின்றபடி அருள்புரிகிறாள். மக்கள் அனைவரும் இக்காளியம்மனை மிகவும் பயபக்தியுடன் வணங்கி வருவது குறிப்பிடத்தக்க செய்தியாகும். இதற்காகவே பிரதி செவ்வாய் மற்றும் வெள்ளிக்கிழமைகளிலும் மற்றும் விசேட நாட்களிலும்

மதுரை–மடப்புரத்திற்குச் சிறப்புப் பேருந்துகள் அதிக எண்ணிக்கையில் இயக்கப்படுகின்றன.

## நால்வர் கோயில்

2003ம் வருடம் ஆடித்தபசு மண்டபத்திற்கு எதிரேயுள்ள நந்தியின் அருகில் சமயகுரவர்கள் நால்வரையும் வைத்து திரு. நாகரெத்தினம் என்ற ஓய்வு பெற்ற தமிழாசிரியர் தனது சொந்த முயற்சியால் ஒரு சிறுகோயிலை அமைத்துள்ளார். தான் ஆசிரியராகப் பணியாற்றும் போது நால்வரது பாடல்களையும் பள்ளியில் மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுக்கும் வாய்ப்பு கிடைத்ததாகவும், அவ்வாறு பாடல்களைப் படித்ததினால் ஓய்வு பெற்றவுடன் இக் கோயிலை அமைத்ததாகவும் இவர் கூறியுள்ளார்.

## நற்பணியில் நால்வர்

பாண்டிய நாட்டில் பழம் பதிகள் பல உண்டு. அவற்றுள் சமயக்குரவர்கள் திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூவரும் பாடிய பாடல்கள் கிடைக்கப் பெற்ற ஒரே பாண்டிய நாட்டுத் திருத்தலம் திருப்பூவணமாகும். இப் பெருமை பாண்டியநாட்டின் தலைநகராய் விளங்கிய மதுரைக்குக் கூட கிடைக்கப்பெறவில்லை என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

மேலும். **மாணிக்கவாசகர்** **திருவசகவலில்** திருப்பூவணத்தைப் பாடியுள்ளார். **அருணகிரி நாதர்** இங்கு எழுந்தருளியுள்ள முருகப் பெருமானைப் பாடியுள்ளார். **கருவூர்த் தேவர்** தேவகானங்களாகிய ஒன்பதாம் திருமுறைச் சார்ந்த திருவிசைப்பா இயற்றியுள்ளார். நைமிசாரண்யத்தில் முனிவர்கள் வட மொழியில் இயற்றிய பதினெட்டுப் புராணங்களில் ஒன்றான பிரம்மவைவர்த்த புராணத்தில் எழுபதாம் அத்தியாயம் முதல் தொண்ணூறாம் அத்தியாயம் முடியத் திருப்பூவணநாதரின் பெருமை பாடப்பெற்றுள்ளது. இதனைத் தமிழில் மொழி பெயர்த்துக் கந்தசாமிப் புலவர் பாடியுள்ளார். இப்புலவர், திருப்பூவணநாதர் உலா, திருப்பூவண நாதர் வண்ணம், மூர்த்தி வகுப்பு, தல வகுப்பு என்ற நூல்களையும் இயற்றியுள்ளார்.

## குமரகுருபரர்

குமரகுருபர சுவாமிகள், பாண்டிய மன்னன் மலையத்துவசன் அவையில் "மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்" பாடியருளியவர். மேலும், "கந்தர் கலிவெண்பா", "மதுரைக் கலம்பகம்" ஆகிய நூல்களையும் இயற்றிய மகான். இவர் தமது அடியார்கள் கூட்டத்துடன் திருப்பூவணம் வந்து வழிபாடு செய்துள்ளார்[1].

## காசிகாநந்த (வேதாந்த) மடம்

திருப்பூவணத்தில் தேசிய நெடுஞ்சாலையில் உள்ள அரசினர் மருத்துவமனைக்கு அருகே, பெண்கள் உயர்நிலைப்பள்ளிக்கு எதிரே காசிகாநந்த மடம் உள்ளது. இதனை வேதாந்த மடம் என்றும் கூறுகின்றனர். சாதுக்கள் வேதாந்தம் பயில வசதியாக இந்த மடம் இருக்க வேண்டும் என்ற எண்ணம் ஸ்ரீலஸ்ரீ காசிகாநந்த ஞானாச்சாரிய சுவாமிகளுக்கு ஏற்பட்டது. இவர் காரைக்குடி அருகில் உள்ள கோவிலூர் வீரசேகர ஞானதேசிக சுவாமிகள் என்ற திருக்களர் ஆண்டவரின் மாணாக்கர் ஆவார். வீரசேகர சுவாமிகள் முத்தியடைந்த பின்பு இவர், காசி முதலான பல திருத்தலங்களிலும் தங்கி வியாகரணம் படித்துத் தேர்ந்து, திருப்பூவணத்திற்கு வந்து 1930ம் ஆண்டு ரூ.40,001/- பொருட் செலவில் மடத்தை நிறுவி வேதங்களைக் கற்பித்து வந்தார். இவர் சுமார் 22க்கும் மேற்பட்ட நூல்களை எழுதியுள்ளார். அவருடைய காலத்திற்குப் பின்னர் மடத்தில் வேத பாடங்கள் கற்பித்தல் நின்றுபோயுள்ளது.

---

[1] http://www.geocities.com/shivaperuman/lifeandworkkumaraguru.html



தற்போது, இம்மடம் காரைக்குடி அருகில் உள்ள கோவிலூர் மடத்தின் நிர்வாகத்தின் கீழ் உள்ளது. கோவிலூர் மடத்தின் பனிரெண்டாம் பட்டமேற்று சீர்வளர்சீர் நாச்சியப்ப ஞானதேசிக சுவாமிகள் (படம்) 1995ம் ஆண்டுமுதல் அருளாட்சி செய்துவருகிறார்கள்.

சுவாமிகளின் சமயப் பணியும், சமுதாயப்பணியும், கல்விப்பணியும், கலைப்பணியும் ஒப்பற்றவை, உயர்வானவை, உன்னதமானவை. இதனால், மடத்தின் புகழ் உலக அரங்கில் தன்னிகரற்று உயர்ந்துள்ளது. சுவாமிகள், அரிய பல முயற்சிகளை மேற் கொண்டு, கல்விநிறுவனங்கள் பலவற்றைத் தோற்றுவித்துள்ளார். மேலும், அவற்றை ஒருங்கிணைத்து நிகர்நிலைப் பல்கலைக் கழகமாக உயர்த்திட முயற்சிகள் மேற்கொண்டுள்ளார்.

### சமணர்

திருப்பூவணத்தில் திருஞானசம்பந்தர் காலத்திற்குமுன் சமணர்கள் இருந்துள்ளனர். 1975-80ம் ஆண்டுகளில், வைகை மேம்பாட்டுத் திட்டத்தில், திருக்கோயிலுக்கும் வைகையாற்றுக்கும் இடையே, ஆற்றையொட்டிய தேரோடும் வீதியில், பூமிக்குக் கீழே கால்வாய் (underground concrete cement channel) தோண்டப்பட்டது. அப்போது பூமிக்கடியிலிருந்து சமணர் கடவுள் சிலை ஒன்று எடுக்கப் பட்டது. அச்சிலையைத் தொல்பொருள் துறையினர் எடுத்துச் சென்றுவிட்டனர். மேலும், சமணர் கழுவேறும் நிகழ்ச்சி இங்கு ஆறாம் திருவிழாவாக நடைபெறுகிறது. இதனால் கி.பி.6ம் நூற்றாண்டுக்கு முன்பு, திருப்பூவணத்தில் சமணர்கள் இருந்துள்ளனர் என்பது உறுதியாகிறது. தற்போது இந்த கால்வாயின் மேலேதான் தேரோடும் வீதி அமைந்துள்ளது.

## தெய்வீகப் பேரவை

1985ம் ஆண்டு விஜயதசமி அன்று குன்றக்குடி அடிகளார் அவர்களால், திருப்பூவணத்தில் பேராசிரியர்.கா.காளிதாசன் அவர்கள் தலைமையில் தெய்வீகப் பேரவை துவங்கப்பெற்றது. மாலைநேரங்களில் இலவசமாகக் கல்விகற்பித்தல், பிரதிவெள்ளிக்கிழமை தோறும் கூட்டுவழிபாடு மற்றும் பிரதி ஞாயிறுதோறும் உழவாரப்பணி செய்து வருகின்றனர். ஆரம்பத்தில், 18 மாணவர்களுக்கு மாலைநேரத்தில் இலவசமாகக்

கல்வி கற்பிக்கப்பெற்றது. வாழையடி வாழையாக, இங்கு படித்தமாணவர்கள் ஆசிரியர்களாகிப் புதிய மாணவர்களுக்குக் கற்பிக்கின்றனர். தற்போது சுமார் 300 மாணவர்கள் கல்வி கற்றுவருகின்றனர். இவர்கள், ஞாயிற்றுக் கிழமைகளில், திருக்கோயிலில் கூட்டுதல், ஒட்டடை அடித்தல், தூசுதட்டுதல், முட்செடிகளை அகற்றுதல், திருவீதிகளைச் சுத்தம் செய்தல், திருவிளக்கு ஏற்றுதல், ஆகிய பணிகளைச் செய்கின்றனர். மேலும், திருவிழாக் காலங்களில் பொதுமக்களுக்கு உதவுகின்றனர். மிகவும் ஏழை மாணவர்களுக்கு இலவசமாகப் புத்தகம், நோட்டுப் புத்தகம் மற்றும் பள்ளிக் கட்டணம் ஆகியவற்றை வழங்குகின்றனர். இங்கு படித்தோர், மருத்துவர்களாகவும் பதவி பெற்றுள்ளனர். அரசுப் பணிகளிலும், தனியார் நிறுவனங்களிலும் பணியாற்றி வருகின்றனர்.

தற்போது திரு.க.உமாசேகர் அவர்கள் இதன் தலைவராகவும், திரு.பூ.புஷ்பவனம் என்ற கோபால் அவர்கள் துணைத்தலைவராகவும், திரு.ந.பாலச்சந்திரன் அவர்கள் செயலாளராகவும், திரு.பெ.நாகநாதன் அவர்கள் துணைச்செயலாளராகவும், திரு.இராமகிருஷ்ணன் என்ற ரமேஷ் அவர்கள் பொருளாளராகவும் உள்ளனர். மேலும், 10 செயற்குழு உறுப்பினர்களும், 30 பொதுக்குழு உறுப்பினர்களும் உள்ளனர். இவர்கள் ஒன்றுகூடிச் செயல்படுகின்றனர். சிவகங்கை சமஸ்தானம்–தேவஸ்தானம் இவர்களது பணியைப் பாராட்டிச் சிறப்பான ஒத்துழைப்பு வழங்கிவருகிறது. பொதுமக்கள் அனைவரும் இவர்களது பணியைப் பாராட்டுகின்றனர். தெய்வீகப் பேரவையின் ஒவ்வொரு உறுப்பினரும் ஒரு அப்பர் பெருமானாகத் திகழ்கின்றனர்.

*****

# 3. கோயிலமைப்பும் சிறப்பும்

இந்தியத் திருநாட்டில் திருக்கோயில்கள் சமுதாயத்தின் தலைமையான அங்கமாகத் தொன்றுதொட்டுத் திகழ்ந்து வருகின்றன. "கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்று ஔவையார் கூறுகிறார். அந்த அளவிற்குத் தமிழர்களின் வாழ்க்கைமுறையானது திருக்கோயிலோடும் அதன் வழிபாட்டோடும் இரண்டறக் கலந்துள்ளன.

திருப்பூவணத்தலத்தில் மிகவும் தொன்மையான காலந்தொட்டு 'சிவலிங்க வழிபாடு' இருந்துள்ளமையை இலக்கியச் சான்றுகளால் அறியமுடிகிறது. தொன்மையான இத்திருப்பூவணத் திருக்கோயில் அமைப்பும் சிறப்பும் ஒருங்கு பெற்றுள்ளது.

## பூவண நாதர் கோயிலின் அமைப்பு

உலகில் எங்கும் காணக் கிடைக்காத காட்சியாகத் 'திருப்பூவணநாதர் திருக்கோயில்' அமைந்துள்ளது. மதுரையைப் போன்றே வைகையாற்றின் தென்கரையில் இக்கோயில் அமைந்துள்ளது. ஐந்து நிலைக் கோபுரத்துடன் சுவாமி சந்நிதி நுழைவுவாயில் அமைந்துள்ளது. சுவாமி சந்நிதியில் சுயம்புலிங்கமாய் ருத்ராட்ச மேனியாய் ஈசானிய திசை(வடகிழக்குத்திசை) நோக்கிச் சிவபெருமான் அருளுகிறார். இச் சுயம்புலிங்கத்திற்கு நேரெதிரே (அதாவது, ஈசானிய திசையில்) ஆற்றின் மறுகரையில் ஆடித்தபசு மண்டபம் உள்ளது.

இடையே வைகையாறு ஓடுகிறது. திருப்பூவணநாதருக்குத் (சுயம்பு லிங்கத்திற்குத்) தீபாராதனை செய்யும் போது ஆற்றின் மறுகரையில் உள்ள ஆடித்தபசு மண்டபத்திலிருந்து தீபாராதனையை வணங்கித் தரிசிக்க முடியும். அதே போன்று ஆடித்தபசு மண்டபத்தில் வழிபாடு நடைபெறும்போது திருப்பூவணநாதர் கோயிலிலிருந்து வழிபடமுடியும். இவ்வாறான காட்சி உலகில் எங்கும் காணக்கிடைக்காத ஆனந்தத் தரிசனக் காட்சியாகும்.



திருக்கோயிலின் நுழைவாயிலில் உள்ள கொடிமரம்

ஆடித்தபசு மண்டபத்திற்கும் திருக்கோயிலுக்கும் இடையே வைகை ஆற்றின் மணலுள்ளே ஆயிரக்கணக்கான

இலிங்கங்கள் உள்ள தென்று கூறுகின்றனர்[1]. அதனால் இதற்கு இடையே மக்கள் யாரும் நடந்து செல்வதில்லை. இக்காரணத்தினாலேயே திருஞான சம்பந்தரும் ஆற்றின் வடகரையிலிருந்து பதிகம் பாடி இறைவனை வழிபட்ட பின்னர் ஆற்றினைக் கடந்து திருக்கோயிலுக்குச் செல்லாமல் வடகரை வழியாக மதுரை சென்றுவிட்டார்.

சிவபெருமான் சந்நிதிக்கும், பெருமாள் சந்நிதிக்கும் இடையே உள்ள நீண்ட தெருவில், முருகன் கோயில் (முன்பு அம்மன் கோயிலாக இருந்தது), விநாயகர் கோயில் ஆகியன உள்ளன. இதனை "ஆவண வீதிப் பூவணங் கோயில் கொண்டாயே"[2] என்று கருவூர்த் தேவர் தனது பாடல்கள்



அனைத்திலும் பாடியுள்ளார். பிற்காலத்தில் அம்மன் சந்நிதியை இறைவன் சந்நிதிக்கு அருகில் கட்டித் திருமதிலை எழுப்பிய போது இவ்வீதி தடைபட்டுப்போயுள்ளது.

## அடைக்கப்பட்டுவிட்ட தெற்கு நுழைவாயில்

சுயம்புலிங்கமாக எழுந்தருளியுள்ள ஈசனது திருவடிவமும், பிற தெய்வங்களின் சந்நிதிகளும், திருச்சுற்றுக்களும், ஆடித்தபசு மண்டபமும் அவற்றின் சிறப்புக்களும் தனித்தனியே குறிப்பிடப் படுகின்றன.

---

[1] திருப்புவனம் கோட்டையில் வசிக்கும் சிற்பி இராசேந்திரன் அவர்கள் கூறியது. மற்றும், திருக்கோயில் பரம்பரைத் தானிகர் திரு. தெய்வசிகாமணிப்பட்டர் அவர்கள் கூறியது.

[2] ஒன்பதாம் திருமுறை, கருவூர்த் தேவர் திருவிசைப்பா, திருப்பூவணப் பதிகப் பாடல்கள் 1–8




**திருக்கோயில் வரைபடம்**

திருக்கோயில் கிழக்கு மேற்காக 400அடியும் வடக்கு தெற்காக 327 அடியும் உள்ளது.

1 மூல லிங்கம் (சுயம்பு)
2 நடராசர் சந்நிதி
3 நவக்கிரகங்கள்
4 நடராசர் சந்நிதி (தற்போது பொருள்வைப்பு அறை)
5 பாஸ்கர தீர்த்தம்
6 பாஸ்கர விநாயகர்
7 பெரிய நந்தி
8 பலிபீடம்
9 கொடிமரம்
10 யானை மண்டபம் இருந்த இடம்
11 இராச கோபுரம்
12 மொட்டைக் கோபுரம்
13 அடைக்கப்பட்டுவிட்ட மேற்கு நுழைவாயில்
14 சந்திர தீர்த்தம் (விஷ்ணு தீர்த்தம்)
15 திருக்கலியாண மண்டபம்
16 சௌந்தரநாயகி அம்மன்
17 பள்ளியறை
18 நந்தி
19 கொடிமரம்
20 அடைக்கப்பட்டுவிட்ட தெற்கு நுழைவாயில் (வடக்கு நுழைவாயிலும் அடைக்கப்பட்டுள்ளது)
21 இலட்சுமி தீர்த்தம்
22 மடப்பள்ளி
23 அம்மன் கோபுர நுழை வாயில்
24 மணிகன்னிகை தீர்த்தம்
25 அம்மன் கோயில் வாயில்

## கருவறை மற்றும் சிவலிங்கத்தின் அமைப்பு

"ஊனுடம்பே ஆலயம்" என்று திருமூலர் குறிப்பிடுகிறார். அதற்கேற்ப மனித உடலைத் திருக்கோயில் அமைப்புடன் ஒப்புமை செய்தால், இரண்டு புருவங்களுக்கிடையில் (நெற்றிக்கண்) உள்ள இடமே கருவறையில் சிவலிங்கம் இருக்குமிடமாகும். இதயம் இருக்குமிடமே நடராசப்பெருமான் ஆனந்தத் தாண்டவம் ஆடுமிடமாகும்.

ஒரே கல்லில் சிவலிங்கம் இருந்தாலும் பொதுவாக அதை மூன்று பகுதிகளாகப் பிரித்துக் கூறுவர் பெரியோர். வணங்கி வழிபடக்கூடிய வட்டவடிவ உருளையைப் போன்ற தலைப்பகுதியை சிவமூர்த்தம் என்றும், ஆவுடையின் நடுவில் உள்ள எட்டுப் பட்டைப் பகுதியை விஷ்ணு மூர்த்தம் என்றும், மண்ணின் உள்ளே பதிந்துள்ள நான்கு பக்கச் சதுரவடிவிலான பகுதியை பிரம்ம மூர்த்தம் என்றும் கூறுவர். இந்த மூன்று பகுதிகளுமே ஒரே கல்லினால் ஆனவையாக இருக்கும்.

திருப்பூவணத்தில் உள்ள சிவலிங்கத்தின் தன்மை முற்றிலும் மாறுபட்டதாக உள்ளது.

*"எண்ணி லங்குறை சராசர மிலிங்கமென் றெண்ணி*
*விண்ணி னாள்களுங் கோள்களும் விலங்குவ ... ..."* [1]

என்ற பாடலில் அண்டசராசரமே இங்கு சிவலிங்கமாகத் தோன்றியுள்ளதாக, விண்ணிலுள்ள தெய்வங்களும் தேவர்களும் மற்றும் நவக்கிரகங்களாகிய கோள்களும் கருதுவ (கூாந டுலயெஅ யவ கூசைரிரஎயயேஅ ளை டீ ய உடிஅிசநளளநன அடினந டிக வாந வடிவயட ருளேைநசளந) என்கிறார் பரஞ்சோதி முனிவர். 'பூச்சரம்' என்று சொல்வது போல் 'சராசரம்' என்று குறிப்பிடுகிறார். இதனால் இங்குள்ள சிவலிங்கம் பூவாலானது என்றும் பொருளாகிறது. சரம்–என்றால் அசைவன என்று பொருள். அசரம்–என்றால் அசையாதன என்று பொருள். இதனால் "திருப்பூவணத்தில் உள்ள அனைத்து அசையும் மற்றும் அசையாப் பொருட்களும் சிவலிங்கமே ஆகும்" என்றும் இப்பாடலுக்குப் பொருள் கூறுவர். திருப்பூவணநாதர், சுமார் ஓர் ஆள் மட்டத்திற்குச் சுயம்பு லிங்கமாய்க் காட்சியருளுகிறார். இலிங்கத்தின் நெற்றியில் திரிசூல முத்திரை உள்ளது. இதனை *"வடிவேறு திரிசூலந் தோன்றுந் தோன்றும்"* [2] என்று திருநாவுக்கரசு நாயனார் குறிப்பிட்டுள்ளார். சிவலிங்கத்தின் ஆவுடையார் சதுர வடிவத்தில் உள்ளது. கோமுகம், இலிங்கத்தின் இடது புறம் உள்ளது. இலிங்கத்தின் பின்பக்கத்தில் உலோகத்தினாலான திருவாசி உள்ளது. இதில் மோட்ச தீபம் ஏற்றுகின்றனர்.

---

[1] பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணம் இரசவாதஞ் செய்த படலம், பாடல் எண் 3

[2] அகத்திய முனிவர் திரட்டியருளிய தேவாரத்திரட்டிற் சேர்ந்த திருப்பதிகம் –திருநாவுக்கரசு நாயனார் அருளிய தேவாரப் பாடல் – திருப்பூவணம் – முதற்பாடல் முதல்வரி

## அறுபத்துமூன்று நாயன்மார்கள் சந்நிதி

கருவறையின் வெளிப்புறத்தே, தெற்கே தெட்சிணாமூர்த்தியும், மேற்கே இலிங்கோத்பவரும், வடக்கே துர்க்கை அம்மனும் உள்ளனர். துர்க்கை அம்மனுக்கு எதிரே சண்டேசுவரர் உள்ளார்.





## கல்விக் கடவுள்

அறுபத்துமூன்று நாயன்மார்களை அடுத்தபடியாக வித்தியாஈசுவரர், சரசுவதி ஆகிய திருமூர்த்தங்கள் உள்ளன. எனவே மாணவர்கள் வேண்டிய பூசைகள் செய்து கல்வியில் நல்ல முன்னேற்றம் காணலாம்.

## அனந்தசயனம்

தில்லையில் (சிதம்பரத்தில்) நடராசர் சந்நிதிக்கு அருகில் பள்ளிகொண்ட பெருமாள் சந்நிதி இருக்கும். அதேபோல் இங்கும் நடராசர் சந்நிதிக்கு எதிரே பள்ளிகொண்ட பெருமாள் உள்ளார். இத்திருக்கோயிலில் இது ஒரு தனிச்சிறப்பாகும்.

## கருப்பன சுவாமி

இத்திருக்கோயிலில் பெரியநந்தியை அடுத்து கருப்பனசுவாமி தனிச்சந்நிதியில் இருந்து அருளுகிறார்.

## நவக்கிரகப் பரிகாரத்தலம்

நவக்கிரகங்களும், 27 நட்சத்திரங்களும் இங்குள்ள சிவலிங்கத்தை வலஞ்செய்கின்றன என்று திருவிளையாடற்புராணத்தில் பரஞ்சோதி முனிவர் பாடியுள்ளார்[1]. இங்கு நவக்கிரகங்களின் சந்நிதியுள்ளது.

## சனீசுவரர் (தனிச் சந்நிதி)

திருநள்ளாறு போன்ற திருத்தலங்களில் சனீசுவரருக்குத் தனிச்சந்நிதி இருப்பது சிறப்புடையதாகக் கருதப்படுகிறது. இதே போன்று இங்கும் சனீசுவரருக்குத் தனிச்சந்நிதி உள்ளது. எனவே இத்தலம் நவக்கிரகப் பரிகாரத்தலமாக விளங்குகிறது. உரிய பூசைகள் செய்து வேண்டிய வரங்களைப் பெறலாம்.

## கருவறை விமான அமைப்பு

விமானங்களின் அமைப்பைப் பலவகையாகப் பிரித்துக் கூறுகின்றனர். அதில் ஒன்று சடங்க விமானம் என்பதாகும். ஒரு கருவறையில் மட்டும் அமைக்கப்படும் விமானத்திற்குச் சடங்க விமானம் என்று பெயர். பூவண நாதர் கோயிலில் உள்ள விமானம் சடங்க விமான வகையைச் சார்ந்ததாகும்.

இதனை,

1. உபபீடம், 2. பிட்டி(சுவர்), 3. பிரஸ்தரம்(கூரை), 4. கீரிவம் (கழுத்து), 5. சிகரம் (உச்சி), 6. ஸ்தூபி (கலசம்), என்று ஆறு பகுதிகளாகப் பிரிக்கலாம்.



திருப்பூவணம் கருவறை விமானத்தின் அமைப்பு

---

[1] பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணம் இரசவாதஞ் செய்த படலம், பாடல் எண் 3

1. உப பீடம் மற்றும் அதிட்டானம் என்பவை விமானத்தின் அடிப்பகுதிகளைக் குறிப்பனவாகும்.

2. பிட்டி

விமானத்தின் நடுப்பகுதி பிட்டி அல்லது சுவர் என்று அழைக்கப்படும். இப்பகுதி அரைத்தூண்களும், நான்கு தேவகோட்டங்கள், மகரதோரணங்கள், கும்ப சரங்கள், முதலிய வேலைப்பாடுகள் அமைந்த சிற்பங்கள் சுதை வேலைப்பாடுகளால் அழகூட்ட விமானத்தில் இடம் பெற்றுள்ளன. இவ் வமைப்பில் எந்தத் திசையில் எந்தக் கோட்டத்தில் எந்த தெய்வத்தை அமைப்பது என்ற வரையறை 'மயன்மதம்' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளதற்கு ஏற்ப, தெற்கே தட்சிணா மூர்த்தியும், மேற்கே இலிங்கோத்பவரும், வடக்கே பிரம்மாவும், கிழக்கே தேவேந்திரன் வெள்ளையானையில் அமர்ந்த நிலையிலும் நிறுவப்பட்டுள்ளன.

3. பிரஸ்தரம்

கருவறையினுடைய மேற்பகுதியை 'பிரஸ்தரம்' என அழைப்பர். இப்பகுதி கொடுங்கை, யாழி உடையதாக அமைக்கப் பெற்றுள்ளது. இக்கருவறையின் கூரைக்குமேல் ஒரு தளம் கொண்ட அமைப்பின் மேல் விமானம் கட்டப் பெற்றுள்ளது. எனவே இது ஏகதளவிமானம் என்று அழைக்கப்படுகிறது. இத் தலத்தின் மேல் ஒரு சிறிய மலைபோல் விமானம் உருப்பெற்றுள்ளது. இவ்விமானத்தின் நான்கு மூலைகளிலும் கர்ண கூடுகள் அமைக்கப் பெற்றுள்ளன. இக்கூடுகளுக்கு இடையில் பத்ர சாலையும் இடம் பெற்றுள்ளது. இக்கூரையின் அடிப்பகுதிக்கும், மேற்பகுதிக்கும் இடையில் விளங்கும் பகுதியில் சுதைச் சிற்பங்கள் அமைக்கப் பெற்றுள்ளன.

4. கிரீவம்

விமானத்தில் கலசம் அமைவதற்குரிய மேற் பகுதியினைக் 'கிரீவம்' அல்லது கழுத்து என்று அழைப்பர். அடிப்பகுதி அகன்று மேற்பகுதி குறுகிய நிலையில் சிகரத்திற்கு உரிய தளம் அமைந்துள்ளது. இது சிகரத்தின் அமைப்பை ஒட்டி, எட்டுப் பட்டை கொண்டதாகக் கருங்கல்லால் கட்டப் பட்டுள்ளது. கழுத்துப் பகுதியின் ஓரத்தில் நந்தியின் உருவம் இடம் பெற்றுள்ளது.

5. சிகரம்

விமானத்தின் மேற்பகுதியாகிய இச்சிகரத்தின் மேல் திசைக்கு ஒன்றாக மொத்தம் நான்கு கலசங்கள் இடம்

பெற்றுள்ளன. இச்சிகரம் எட்டுப்பட்டை வடிவமாக அமைந்துள்ளது. எனவே இது திராவிடம் என்று பெயர் பெறும். கழுத்துப் பகுதியை இணைக்கும் இச்சிகரம் நடுவிடம் சிறுத்தும் உச்சிகோர்த்தும், காணப்பெறுகிறது.

### 6.ஸ்தூபி

ஒரு கோயிலின் முழுத்தன்மையே கலசத்தைத்தான் பொறுத்துள்ளது என்று "மானசாரம்" என்ற சிற்ப நூல் குறிப்பிடுகிறது.



### ஈசனது ஐந்து முகங்களைப் போன்று ஐந்து கலசங்கள்

பூவணநாதர் கோவிலில் நான்கு திசைகளுக்கும் ஒவ்வொன்றாக நான்கு கலசங்களும், மையப் பகுதியில் ஒரு கலசமுமாக மொத்தம் ஐந்து பொற்(தங்கமுலாம் பூசப்பட்டுள்ள) கலசங்கள் உள்ளன. விமானத்தின் நடுவில் உள்ள கலசம் பெரியதாகவும் சதுரவடிவிலும் உள்ளது. கலசத்தின் மொட்டும் சதுர வடிவில் உள்ளது. சுற்றிலும் உள்ள நான்கு கலசங்களும் சிறியதாகவும் உருண்டையாகவும் உள்ளன. இவ்வாறான ஓர் அமைப்பு தனிச்சிறப்புடையதாகக் கருதப்படுகிறது. விமானத்தில் பொன்னனையாள் கையில் அன்னக் கரண்டியுடன் உள்ள சுதைச் சிற்பம் உள்ளது.

கோயிலின் சக்தியானது விமானக்கலசங்களின் வழியாகப் பெறப்படுவதுடன், வழங்கவும் படுகிறது. விமானத்தின் மேற்பகுதியில் அமைந்துள்ள இக்கலசங்கள் விமானத்தின் நிறைவைக் காட்டுகின்ற உறுப்பாக உள்ளன.

## அம்மன் சந்நிதி

பொதுவாகச் சிவாலயங்களில், இறைவியின் கோயில் இறைவனின் சந்நிதிக்கு வடபுறத்தில் தெற்கு நோக்கி இருக்கும். ஆனால் இறைவி, இறைவனைப் பூசித்து, திருமணம் கொண்டருளிய திருத்தலங்களில் இறைவன் கோயிலுக்குப் பக்கத்தில் தெற்கில் அல்லது வடக்கில் இருக்கும் அல்லது தலச் சிறப்புக் காரணமாக வெவ்வேறிடங்களில் வேறு திசை நோக்கியிருப்பதும், புறத்தே தனிக் கோயில் கொண்டிருப்பதும் உண்டு.

சில நூற்றாண்டுகளுக்கு முன்புவரை திருப்பூவணத்தில், சிவலிங்கத்தின் வலப்பக்கத்தில் தனிக்கோயிலில் மின்னம்மை தேவியார் வைகை ஆற்றினைப் பார்த்தபடி தனியே கோயில் கொண்டு இருந்திருக்கிறாள்.

தற்போது மதுரையில் உள்ளதைப் போன்று, இறைவன் திருக் கோயிலுக்கு உள்ளேயே வலப்பக்கத்தே இறைவியின் சந்நிதியுள்ளது. ஆனால் மதுரையில் அன்னை மீனாட்சியை வணங்கி வழிபட்ட பின்னரே இறைவனை வணங்கி வழிபடுகின்றனர். பிற்காலத்தில் கட்டப்பட்ட கோயில்களில் பொதுவாகச் சிவன் கோயில்களில் அம்மன் சந்நிதி தெற்குப் பார்த்திருக்கும். அதனால் தெற்குக் கோபுரம் வழியாகச் செல்வோர் முதலில் அம்மனை வணங்கிய பின்னரே இறைவனை வணங்கவேண்டும் என்பது போன்ற அமைப்பில் இருக்கும்[1].

## முதல்வணக்கம்

திருப்புவனத்தில் அம்மன் சந்நிதியும், சுவாமி சந்நிதியும் வடகிழக்குப்பார்த்து இருந்தாலும் முதலில் திருப்பூவணநாதரை வணங்கி வழிபட்ட பின்னரே அம்மையை வழிபடவேண்டும்.[2] முதல்வணக்கம் என்றும் மூலவருக்கே! இல்லையேல் –

---

[1] பு.பா.உமாமகேசுவரி, நெல்லையப்பர் கோயில், இறைவிகோயில், பக்கம்.119 (திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்)

[2] திருப்பூவணப் புராணம், திரணாசனன் முத்தி பெற்ற சருக்கத்தில் இச்செய்தி பற்றி விரிவாக எடுத்துக் கூறப்பெற்றுள்ளது.

மூளைகெட்டுப்போகும். (இதுபற்றி திருப்பூவணப் புராணம், திரணாசனன் முத்தி பெற்ற சருக்கத்தில் விரிவாகக் கூறப்பெற்றுள்ளது.) ஆற்றின்கரையிலிருந்து வரும் கோயில் பாதையும் நேரிடையாகச் சுவாமி சந்நிதிக்குத்தான் செல்கிறது. அம்மன் சந்நிதி மொட்டைக்கோபுர வீதியுடன் முடிவடைந்து விடுகிறது.

அம்மன் கோயிலின் விமானம் சடங்க விமானமாகும். ஆனால் சுவாமி சந்நிதியில் திசைக்கொரு கலசம் இருப்பது போன்று இவ்விமானத்தில் இல்லை. சடங்க விமான இலக்கணப்படி உபபீடம், பிட்டி, பிரஸ்தரம், கிரீவம், சிகரம், ஸ்தூபி என ஆறு பகுதிகளாக உள்ளது.

## இராச கோபுரம்

திருப்பூவணநாதர் திருக்கோயில் ஐந்துநிலையிலான இராச கோபுரத்தை உடையது. ஈசன்யம் (வடகிழக்குத் திசை) பார்த்த கோயில் வாசல். இதில் சிற்பங்கள் ஏதும் இடம்பெறவில்லை. அரைத்தூண் களுக்கு இடையே கோபுரத்தின் ஐந்து வாயில்களும் இருப்பது போன்று காணப்படுகிறது.

அம்மன் கோயில் நுழைவு வாயிலில் மூன்று நிலையிலான இராசகோபுரம் உள்ளது.

## திருக்கோயிலின் உள் அமைப்பு

மதுரை அருள்மிகு மீனாட்சியம்மன் திருக்கோயிலில் உள்ளது போன்று திருப்பூவணத்திலும் சுவாமி சந்நிதி தனியாகவும், அம்மன் சந்நிதி தனியாகவும் உள்ளது. இச்சந்நிதிகளைத் தனித்தனியாகச் சுற்றிவரலாம். இரண்டு சந்நிதிகளையும் சேர்த்து ஆடிவீதி என்ற ஒரு திருச்சுற்று உள்ளது. இதற்கு அடுத்தாற்போல் திருக்கோயிலின் பெரிய மதிற்சுவர் உள்ளது.

## ஆடித்தபசு மண்டபம்

ஆற்றின் வடகரையில் மடப்புரம் செல்லும் வழியில் திருஞானசம்பந்தர் பாடியருளிய இடத்தில் ஆடித்தபசு மண்டபம் உள்ளது. ஆடிமாதம் முழுநிலவுநாளில் இங்கு அம்மனை எழுந்தருளச் செய்து வழிபாடு நடைபெற்று வந்தது. ஆங்கில வருடம் 1950–60 ஆண்டு காலத்தில் ஆடித்தபசு மண்டபத்தின் மேலே ஆலஞ்செடி ஒன்று வேர்விட்டு வளரத்துவங்கியது[1].

---

[1] இந்நூல் ஆசிரியர் 1971ஆம் ஆண்டு திருப்பூவணம் பள்ளியில் கல்வி கற்றபோது நேரில் கண்டது.




## ஆடித்தபசுமண்டபம் இருப்பிடத்தைக் காட்டும் படம்

அவ்வாறு வளர்ந்த செடி இன்று விருட்சமாக வளர்ந்து மண்டபத்தினை முழுமையாக ஆக்கிரமிப்புசெய்துவிட்டது இதனால் தற்போது ஆடித்தபசு மண்டபம் மிகவும் இடிந்து சிதிலமடைந்த நிலையில் உள்ளது.

1966ம் ஆண்டு நடைபெற்ற ஆடித்தபசு விழாவின் போது ஆலமரவிழுதினால் சிதிலமடைந்த மண்டபக் கருவறையில் தீபாராதனை காட்டும்போது மண்டபத்தின் மேலேயிருந்து மிகப் பெரிய பாம்பு ஒன்று தீபாராதனைத் தட்டிலேயே

விழுந்துவிட்டது. இதன்காரணமாகக் குருக்கள் பூசையை நிறுத்தி விட்டார்[1].

அந்த ஆண்டிலிருந்து அங்கே முறையான பூசைகளும் நின்றுபோய் விட்டன. மேலும் ஆற்றில் கிடந்த இரண்டு சிவலிங்கங்களையும் ஆடித்தபசு மண்டபத்தின் அருகிலேயே எடுத்து வைத்து வழிபாடு செய்து வருகின்றனர்.



மேலும், மண்டபத்தின் வாயிலிலே பிள்ளையாரை வைத்து வழிபாடு செய்து வருகின்றனர். இப்பிள்ளை யாருக்கு "இராட்சதக் கண்ணுப் பிள்ளையார்"[2] என்று பெயர் கூறுகின்றனர். இப்பிள்ளையாரே மண்டபத்தின் கருவறைக்குள் இருந்ததாகவும் கூறுகின்றனர். முறையான பூசைகள் இல்லை. இப்பிள்ளையாரே திருப்பூவண லிங்கத்திற்கு நேர் எதிரே ஆற்றின் வடகரையில் இருந்து சிவலிங்கத்தைப் பார்த்தபடி காட்சியளிக்கிறார். தற்போது, மின்வாரியத்தில் பணியிலிருந்து ஓய்வு பெற்ற திரு.தங்கசாமி என்பவர் இங்கு தீபம் ஏற்றிப் பொங்கல் வைத்து அன்னதானம் செய்து வழிபாடு செய்து வருகிறார்.

ஆற்றின் வடகரையில் உள்ள ஆடித்தபசு மண்டபத்தின் வாயிலில் உள்ள பிள்ளையாருக்கு முன் ஒரு நந்தி உள்ளது. இந்த நந்தியானது ஆற்றின் தென்கரையில் திருக்கோயிலினுள் உள்ள திருப்பூவண நாதருக்கு (சுயம்புலிங்கத்திற்கு) நேர் எதிரே உள்ளது.

---

[1] திருப்பூவண நாதர் திருக்கோயில் பரம்பரைத் தானிகர் தெய்வசிகாமணிப்பட்டர் கூறியது.

[2] இராட்சதக்கண்ணு என்பவர் திருப்பூவணத் திருக்கோயில் ஸ்தானிகர்களின் குலதெய்வமாக வணங்கப்பட்டு வருகிறார். இவரது திருவுருவம் சிவன் கோயில் உள்ளே அனந்தசயனப் பெருமாளுக்கு அருகில் அமையப்பெற்றுள்ளது.



ஆலமரத்தினால் ஆக்கிரமிப்புச் செய்யப்பட்டுள்ள
ஆடித்தபசு மண்டபம்



(ஆற்றிலிருந்து கண்டெடுக்கப்பட்ட இரண்டு
சிவலிங்கங்கள் மற்றும் ஒரு நந்தி
ஆடித்தபசு மண்டபத்தின் அருகே
வைக்கப்பெற்றுள்ளன)



ஆடித்தபசு மண்டபம்
(சிதிலமடைந்த நிலையில்)





ஓங்கிய வாளுடன்
தாக்குதலுக்குத் தயாராக
உள்ள வீரன்





ஆடித்தபசு மண்டபத்தில் பழமையான வட்டெழுத்துக் கல்வெட்டு உள்ளது. இக்கல்வெட்டு கி.பி. ஆறாம் நூற்றாண்டிற்கு முந்தையதாகக் கருதப்படுகிறது. இதற்குமுன் இந்த இடத்தில் வழிபாடு இருந்துள்ளது என்றும் தெரியவருகிறது என்று காரைக்குடி கல்வெட்டு ஆராய்ச்சியாளர் பேராசிரியை சொ.வள்ளி அவர்கள் தெரிவித்தார்கள்

இந்நூலாசிரியரால், திருப்பூவணம் திருக்கோயில் தொடர்பாகவும், ஆடித்தபசு மண்டபம் சிதிலமடைந்துள்ளதைச் சீரமைப்பது தொடர்பாகவும் "குமுதம் ஜோதிடம்" வாரஇதழுக்குத் தகவல் தெரிவிக்கப்பட்டது. செய்தியறிந்த அதன் ஆசிரியர், உயர்திரு.A.M.இராஜ கோபாலன் அவர்கள், திருக் கோயிலின் பெருமைகளைப் பொதுமக்கள் அறியும் வகையிலும், சிதிலமடைந்த ஆடித்தபசு மண்டபத்தைச் சீரமைக்கும் வகையிலும் 13–10–2006 மற்றும் 20–10–2006 நாளிட்ட குமுதம் ஜோதிடம் இதழ்களில் சிறப்புக் கட்டுரைகள் எழுதி வெளியிட்டார்கள்.

இதன் பயனாகத் தேவகோட்டை ஜமீன்தார், உயர்திரு. AL.AR.SM. நாராயணன் செட்டியார் அவர்களின் வழிகாட்டுதலின்படி, தேவகோட்டை உயர்திரு. தி.ராம. திண்ணப்பன் செட்டியார் அவர்கள், இம்மண்டபத்தைச் சீரமைக்கும் பணியை உபயமாகச் செய்திட முன்வந்தார்கள். இத்திருப்பணியில் தேவகோட்டை சேவுகன் அண்ணாமலைக் கல்லூரியில் பணியாற்றும் இயற்பியல் பேராசிரியர் Dr.சந்திரமோகன் அவர்கள் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டு செயலாற்றி வருகிறார்கள். இத்திருப்பணி தேவ கோட்டை ஸ்தபதியார் மு.சண்முகம் அவர்களிடம் ஒப்புவிக்கப் பெற்றுள்ளது. அதற்கான பூமிபூசை 23–04–2007 அன்று காலை 9.00 மணி முதல் 9.30க்குள் சிறப்பாக நடைபெற்று புனர்நிர்மாணப் பணிகள் நடைபெற்று வருகின்றன.



ஆடித்தபசு மண்டபம் பூமிபூசையின் போது (இடமிருந்து வலமாக)
1) பேராசிரியர் Dr.ரெ.சந்திரமோகன்
2)தேவஸ்தான மேலாளர் இளங்கோ
3) ஸ்தபதியார் மு.சண்முகம்
4) தொழிலதிபர் முத்துப்பாண்டி
5) வழக்கறிஞர் சண்முகநாதன்
ஆடித்தபசு மண்டப பூமிபூஜை சங்கு பதிக்கும் நிகழ்ச்சி.

ஸ்தபதியார் மு.சண்முகம் அவர்கள் முன்னிலையில், இந்நூலாசிரியரின் அண்ணன் திரு.கி.நாகரெத்தினம் தமயந்தி தம்பதியினரால் பால் வார்க்கப்படுகிறது. அவர்களுக்கு அருகில் இந்நூலாசிரியர் கி.காளைராசன் நாகலெட்சுமி தம்பதியினர் உடனிருக்கின்றனர்.




ஆடித்தபசு மண்டபத்திற்கும், திருக்கோயிலுக்கும் இடையே ஆற்றின் நடுவே சிதையுண்டு கிடக்கும் கற்கோயில். (ஆடித்தபசு மண்டபத்தில் உள்ள ஆலமரம் பின்னால் தெரிகிறது)



சிதைபாடுகளுக்கு இடையே கோமுகம் ஒன்று கிடக்கிறது. இதனால் இங்கு கோயில் ஒன்று இருந்துள்ளது என்பது தெளிவாகப் புலப்படுகிறது.

## திருப்பூவண நாதர் கோயில் இருப்பிடம்

ஓர் இடத்தைக் குறிப்பிடும் போது அதன் நான்குபக்கமும் உள்ள மற்றவற்றைக் கூறி அவ்விடத்தை விளக்குவது நடைமுறையில் வழக்காக உள்ளது. இதற்கு 'நான்குமால்' என்று கூறுவர். அவ்வகையில் திருப்பூவணக் கோயிலின் நான்குமாலாக உள்ள இடங்கள் பற்றிய விவரங்கள் விரிவாக இப்பகுதியில் சுட்டப்படுகின்றன.

## திருப்பூவணத் திசைகள்

மதுரைக்குத் தென்கிழக்கே(அக்கினித்திசை) உள்ள திருப்பூவணத்துத் திருக்கோயில் ஈசான திசையைப் பார்த்து அமைந்துள்ளது. மேலும் வைகையாறும் திசைமாறி வடக்கு-தெற்காகச் சிறிது தூரம் ஓடுகிறது. அதே போன்று கோயிலின் தெற்கே உள்ள தேசிய நெடுஞ்சாலையும் திருப்பூவணம் அருகே வளைந்து செல்கிறது. இதனால் திருப்பூவணத்தில் திசைகள்

மாறித் தெரியும், ஒருஇடத்திற்கும் மற்றொரு இடத்திற்கும் திசைகளில் அதிகமான (சுமார் 45பாகைவரை) வித்தியாசம் தெரியும். எனவே திருப்பூவணத்துக் கிழக்கு மேற்கை அறுதியிட்டுக் கூறஇயலாது. இதனைக் குறிப்பிடும் வகையில் "திருப்பூவணத்துக் கிழக்கும் மேற்கும் பிரமனூர்க் கணக்கு வழக்கும் சொல்லமுடியாது", என்ற பழமொழியும் உண்டு. பிரமனூர் என்பது திருப்பூவணத்திற்குக் கிழக்கே சுமார் 5 கி.மீ. தூரத்தில் உள்ளது. இந்த ஊரில் திருப்பூவணக் கோயில் நிலங்கள் அதிகம் இருந்ததாகவும், ஆனால் பின்னர் முறையான குத்தகை வசூல் குறைந்து விட்டதாகவும், அதனால் தான் இப்பழமொழி தோன்றியதாகவும் கூறுகின்றனர்.



## ஆற்றின் வடகரையில் உள்ள நந்தி

பூவண நாதர் கோயிலுக்கு எதிரே மொட்டைக் கோபுரமும் மொட்டைக் கோபுரத்தை அடுத்து வைகை ஆறும், ஆற்றங் கரையில் தேரோடும் வீதியும் உள்ளன.

மேற்கே மதுரை–இராமேசுவரம் தேசிய நெடுஞ்சாலை உள்ளது. கோயிலுக்கும் சாலைக்கும் இடையிலான சிறிய பகுதி, மக்கள் செறிவான குடியிருப்புப் பகுதியாக உள்ளது.

தெற்கில் முருகன் கோயிலும், பெருமாள் கோயிலும் உள்ளன. கோட்டை என்ற பகுதி உள்ளது. இது மக்கள் செறிவான குடியிருப்புப் பகுதியாகும். மக்கள் தொன்று தொட்டு வாழ்வதால் வீடுகள் யாவும் மிகவும் நெருக்கமாக அமைந்துள்ளன. இப்பகுதியைத் தாண்டித் தேர்முட்டியும், தேர் சுற்றிவரும் திருச்சுற்றின் கிழக்கு வீதியும் உள்ளன. தேர், கோயிலைச் சுற்றிவரும்பொழுது இக் கோட்டைப்பகுதி முழுமையையும் சுற்றிவரும் வண்ணம் தேரோடும் வீதி அமைந்துள்ளது.

வடக்கே தேரோடும் வீதியும், அதனை அடுத்து திருப்புவனம்–சிவகங்கைச் சாலையும் உள்ளன. கோயிலுக்கும் வடபுறத்துத் தேரோடும் வீதிக்கும் இடையே தற்போது மக்கள் குடியிருப்புகள் உள்ளன.

## இறைவனின் திருப்பெயர்கள்

புட்பவன நாதர், பாஸ்கரபுரி ஈசர், பிதுர் மோட்சபுரீசர், பிரம்மபுரீசர், இரகசிய சிதம்பரேசர், திருப்பூவணேசர், அடைவார் வினை தீர்ப்பவர், சௌந்தர நாயகர், அழகிய நாயகர் என்பன.

## இறைவியின் திருப் பெயர்கள்

சௌந்தரநாயகி, தடிதம்பை, சுவர்ணவல்லி, அன்னபூரணி, அழகியநாயகி, அழகியமின், மின்னனையாள், மின்னம்மை, மின்னாள் என்பன.

## தீர்த்தங்கள்

1) பாபநாச தீர்த்தம் – சிவலிங்கத்தின் நேர் பார்வையில் ஓடும் வைகையாறு பாபநாச தீர்த்தம் ஆகும். இதற்கு "வேகவதி" என்ற பெயரும் உண்டு. சூரிய உதயத்திற்கு முன் இதில் மூழ்கி, சிவராத்திரியிலே தூக்கமின்றி, நான்கு யாமமும் விழித்திருந்து சிவபூசை செய்து தானங்கள் செய்வோர், இறுதியிலே சிவலோகம் சேர்ந்து வாழ்வர்.[1]

2) <u>மணிகர்ணிகைத் தீர்த்தம்</u> – தற்போதுள்ள முருகன் கோயிலுக்கு எதிரே உள்ள மிகப்பெரிய குளம். இதற்கு மணிகன்னிகா தீர்த்தம், மணிகுண்டம், தேவிகுண்டம், என்ற

[1] திருப்பூவணப் புராணம், தீர்த்தச் சருக்கம், பாடல்–7

பெயரும் உண்டு. (தற்போது மூடப்பட்டுள்ளது). இதன் சிறப்புக்கள் இந்நூலில், தீர்த்தச் சருக்கத்திலே விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

3)பிரம்ம தீர்த்தம் – ஆற்றின் வடகரையில் மடப்புரம் செல்லும் வழியில் சாலைக்கும் ஆற்றுக்கும் இடையே, சித்திவிநாயகர் கோயில் எதிரே பிரம்மதீர்த்தம் (கிணறு)[1] உள்ளது. (படம்)

4)இலக்குமி தீர்த்தம் – திருப்பூவணம் வைகை ஆற்றுப் பாலத்திற்கு அருகே நூலகத்தின் பின்புறம் திருப்பூவணம் பேரூராட்சிக்குப் பின்புறம் உள்ள குளம் இலக்குமி தீர்த்தம் ஆகும். (தற்போது மூடப்பட்டுவருகிறது). மூலலிங்கத்தின் அபிஷேகத் தீர்த்தம் கோவிலுக்கு வெளியே சென்று இத்தீர்த்தத்தில் விழும்படித் தூம்பு ஒன்று இருந்துள்ளது. வைகையாற்றின் குறுக்கே பாலம் கட்டும் போது இத்தூம்பு மூடப்பட்டுவிட்டது.

மருதுசகோதரர்கள் ஆட்சிக்காலத்தில், இத்தீர்த்தத்தின் கரையிலே இரண்டு பெரிய மருதமரங்கள் இருந்துள்ளன. அவற்றைப் "பெரியமருது, சின்னமருது" என்று பெயரிட்டு அழைத்துப் பொதுமக்கள் வணங்கி வந்துள்ளனர். காளையார்கோயில் தேர் செய்வதற்காக அம்மரங்களை வெட்டுவதற்கு மறுப்புத் தெரிவித்துவிட்டனர். பின்னர், மருதுசகோதரர்களே நேரில் வந்து கேட்டுப் பெற்றுள்ளனர்[2].

5)மார்க்கண்டேய தீர்த்தம் – தேசிய நெடுஞ்சாலையில் மாரியம்மன் கோயிலுக்குச் சற்று கிழக்கே உள்ள குளம்.

6)விஷ்ணு தீர்த்தம்[3] – சிவலிங்கத்திற்குப் பின்புறமாக இரண்டம்பு செல்லும் தூரத்தில் உள்ளது. முக்குளம், நரிக்குடி செல்லும் சாலையில், இருப்புப்பாதையைத் தாண்டி நயினார்பேட்டை அருகில் உள்ளது.

---

[1] இத்தீர்த்தத்தின் சிறப்புக்கள் திருப்பூவணப் புராணம், திரணாசனன் முத்தி பெற்ற சருக்கத்திலே கூறப்பட்டுள்ளன.

[2] இச்செய்தி "சிவகங்கைச் சீமை" என்ற திரைப்படத்தில் இடம் பெற்றுள்ளது.

[3] திருப்பூவணப் புராணம் – இலக்குமி சாபவிமோசனச் சருக்கம், பாடல் வரிசை எண்.65

7)வசிட்ட தீர்த்தம்[1] – நல்ல மாதவத்தை உடைய வசிட்ட முனிவரால் தோற்றுவிக்கப்பட்ட தீர்த்தம் இது. இத் தீர்த்தம், சிவலிங்கத்தின் பார்வையில் இரண்டம்பு செல்லும் தூரத்தில் உள்ளது. இதில் மூழ்குவோர் சிவபெருமானின் திருவடிநிழலில் வாழ்வர். இத்தீர்த்தம் இருந்த இடம் சரியாகத் தெரியவாவில்லை. ஆடித்தபசு மண்டபத்திற்கு அருகில் முன்பு குளமாக இருந்து தற்போது மூடப்பட்டிருக்கும் என்று யூகிக்கப்படுகிறது.

8)இந்திர தீர்த்தம்[2] – கிருதமால் ஆற்றினை மேல் அணிந்து விளங்குதர் இந்திர தீர்த்தம் என்று இத்தீர்த்தம் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. இத்தீர்த்தத்தில் பங்குனி உத்திரத்தில் தீர்த்தமாடுவோர் போகபலத்தைச் சார்வர். பனிரெண்டு தினம் மூழ்குவோர் ராசபோக பலத்தைப் பெறுவர். ஒருமாதம் மூழ்குவோர் அசுவமேத யாகபலனைப் பெறுவர். இத் தீர்த்தத்தைப் பருகுவோர் அக்கினி ஹோம பலனைப் பெறுவர். இத்தீர்த்தம் உள்ள இடம் எதுவென சரியாகத் தெரியவில்லை.

## விருட்சங்கள்

பாரிசாத (மந்தாரமரம்) மரத்தின் கிளையை நட்டு வளர்த்து அதன் கீழிருந்து உமையம்மை தவம் செய்தார். அம்மரத்தின் கீழே ஈசன் சுயம்புலிங்கமாய்க் காட்சியளித்ததாகத் திருப்பூவணத் தலபுராணம் கூறுகிறது. இதனால் "பாரிசாத மரம்" தலவிருட்சமாகும். தற்போது கோயிலில் பாரிசாதமரம் இல்லை. இராசகோபுரத்திற்கு அருகே பலாமரம் ஒன்று உள்ளது. திருப்பூவண நாதர் உலாவில்

*"இந்தக் கனியெவர்க்கும் எட்டா நறுங்கனிகாண்*
*முந்தப் பழமறையின் மொய்ப்பதுகாண் – சந்தமும்*
*ஒன்றாய்ப் பலவாம் உருவிற் பொருந்தியெங்கும்*
*நன்றாய்ப் புறம்புமுள்ளு நண்ணுங்காண் – குன்றாத*
*பாவு மலையிற் பசுந்தேனுடன் கலந்தங்*
*கோவில் கருணைரசம் ஊறுங்காண் – பேசுமன்பர்*
*உள்ளத் தினிக்குங்காண் ஓர்பொன் னலையாட்குக்*
*பெரிய முகுந்தப் பிரமாதி யர்க்கும்*
*அரிய பழங்காண்"*[3]

என்று இறைவனைப் பலாப்பழமாக உருவகஞ்செய்து பாடப்பட்டுள்ளது. இதனால் இத்தலவிருட்சம் "பலாமரம்"

---

[1] திருப்பூவணப் புராணம் – தீர்த்தச்சருக்கம், பாடல் எண்.10
[2] திருப்பூவணப் புராணம் – தீர்த்தச்சருக்கம், பாடல் எண். 11,12,13

[3] *திருப்பூவணநாதர் உலா* – பாடல் வரிகள் 197–201

என்றும் கூறுவர். மேலும் தற்போது நடைபெற்றுக்கொண்டிருக்கும் கலியுகத்தில் பலாமரமே இத்தலத்தின் விருட்சமாகும் என்றும் கூறுவர்.



## கலியுகத்தில் உள்ள தலவிருட்சம் (பலாமரம்)

### நடராஜர்

*"நாற்கோணம் பூமி புனல் நண்ணும்மதி யின்பாதி*
*ஏற்கும் அனல் முக்கோணம் எப்போதும் ஆர்க்கும்*
*அறுகோணம் கால்வட்டம் ஆகாயம் ஆன்மா*
*உறுகாயம் ஆம் இவற்றால் உற்று"*

என்ற தனிப்பாடல் நடராசரின் திருவடிவழகினை எடுத்துக் கூறுகிறது. திருப்பூவணத்தில், சதுரவடிவமான அரங்கினிலே, கங்கை, திங்கள் இவற்றை அணிந்து கொண்டு வலது கையில் ஒலிக்கும் துடியையும், இடதுகையில் அனலையும் கொண்டு இடது காலைத் தூக்கி வலதுகாலை முயலகன் மீது ஊன்றி திருநடனமாடுகிறார். ஜடா மகுடம், திருமேனியோடு ஒட்டி பின்தாழும் செஞ்சடைகள், ஒடிவும் வளைவும் இலக்கணப்படியுள்ள அழகான திருமேனி. இந்த ஐம்பொன் சிற்பம் கி.பி.14–ம் நூற்றாண்டைச் சார்ந்தது.

## கல்லினால் ஆன நடராஜர்

நடஈசனின் வடிவத்தைப் பொதுவாக கல்லில் வடிப்பதில்லை. ஆனால் விதிவிலக்காகச் சில திருத்தலங்களில் மட்டும் கருவறைக்கு அருகில் கல்லினால் ஆன நடராஜரைக் காணலாம். மதுரையில் கருவறைக்கு அருகில் உள்ள கல்லினால் ஆன நடராஜர் வடிவத்திற்கு இயைபு உடைய அளவிற்குத் திருப்பூவணத்திலும் கல்லினால் ஆன நடராஜர் சிலை உள்ளது.

மதுரையில் உள்ள நடராசர் இடது காலைத் தரையில் ஊன்றி வலது காலைத் தூக்கி ஆடுகிறார். ஆனால் திருப்பூவணத்தில் வலதுகாலை ஊன்றி இடதுகாலைத் தூக்கி ஆடுகிறார். இவ்விரண்டு திருவடிவங்களையும் கண்ணுற்றால் ஒரே சிற்பியால் செதுக்கப்பட்டிருக்க வேண்டும் என்ற எண்ணம் ஏற்படும். இதனால் மதுரைக் கோயில் கருவறையும் திருப்புவனம் கோயில் கருவறையும் சமகாலத்தில் கட்டப்பட்டிருக்க வேண்டும் என்று கருத இடமுண்டு.

## மொட்டைக் கோபுரம்

திருக் கோயிலுக்கு மிகப் பெரிய இராயகோபுரம் கட்டும் முயற்சியில் திருமலை நாயக்க மன்னர் ஈடுபட்டு, கோபுரம் முழுமையாகக் கட்டப்படாமல் மொட்டைக் கோபுரமாக உள்ளது. இதனை மதுரையைப் பற்றி விளக்கும் இணைய தளம் (Web site) ஒன்று குறிப்பிட்டுக் காட்டி யுள்ளது[1].



இது போன்று கட்டப்படாமல் மதுரை, அழகர்கோயில் ஆகிய இடங்களிலும் மொட்டைக்கோபுரங்களாகவே உள்ளன.

## கல்வெட்டுக்கள்

இக்கோவிலில் மிகவும் பழமையான கல்வெட்டுகள் சிதையுண்டு பல்வேறு இடங்களில் துண்டுதுண்டாக

[1] www.maduraionline.com/thirupuvanam

இருக்கின்றன. சுவாமி சந்நிதியின் சுற்றுப்பிரகாரத்திலும், அங்குள்ள மண்டபத்திலும் ஏராளமான கல்வெட்டுக்கள் உள்ளன. அவற்றில் இரண்டு கல்வெட்டுகள் தென்னிந்தியக் கல்வெட்டுக்கள் தொகுதி 5ல் பக்கம் 119, 120ல் வரிசை எண் 305, 306 ஆக வெளியிடப்பெற்றுள்ளன.[1]

## No. 305 / A.R. No. 17 of 1894 on the east wall of the Mandapam in front of the Pushpavaneswara Shrine at Tiruppuvanam

| வரி எண் | |
|---|---|
| 1 | "திரிபுவனச் சக்கரவர்த்தி கொநேரின்மை கொண்டான் திருப்பூவணத்துத் தண்டல் நாயகஞ் செய்வார்களுக்கு திருப்பூவ |
| 2 | ணமுடைய நாயனார் தெவதானம் திருப்பூவணத்து தனிப்பங்கு பாட்டத்துக்கு எட்டாவது தைம் மாதம் முதல் ஆண்டொ |
| 3 | ன்றுக்கு வாடாக் கடமையாகத் தண்டல் மெனி நானூற்று ஐம்பது பொன் இறுப்பதாகச் சொல்லி இப்படிக்கு வரியிலார் கண |
| 4 | க்காலும் நிறுத்தச் சொன்னோம். இப்படிக்கு இவ்வொலை பிடிபாடாகக் கொண்டு அழகிய பெருமான் திருமுகமும் எழுதிக் கொண்டு |
| 5 | திருப்பூவணமுடைய நாயனார் கோவிற் கணக்கிலும் தங்களூர் கணக்கிலும் நிறத்துவித்து சந்திராதித்த வரைச் செல்லக் கல்லிலுஞ் |
| 6 | செம்பிலும் வெட்டிக் கொள்க. இவை துஞ்சலூருடையான் எழுத்து. இவை சுந்தர பாண்டிய பல்லவராயன் எழுத்து. கலியாண்டு |
| 7 | ஒன்பதாவது நாள் முத்பத்தெட்டு" |

[1] South Indian Inscriptions Voluime-V, Year 1925, Page No.119 & 120.

## No. 306 / A.R. No. 17-A of 1894
## in the same place

| வரி எண் | |
|---|---|
| 1 | (இவ்வெழுத்துக்களை தட்டச்சு செய்ய இயலவில்லை) |
| 2 | நம்பிள்ளை பராக்கிரம பாண்டிய தேவர்க்கு யாண்டு ஒன்பதாவது நாள் சிங்கநாயிற்றுப் பூறுவ பக்ஷத்து அட்டமியும் புத |
| 3 | ன் கிழமையும் பெற்ற அனுடத்து நாள் .... பங்கு பாட்டத்துக்கு எட்டாவது தைம்மாதம் முதல் நம்பி தெவர் நங்கைப் பரிப்பார் கொவணவர் கணக்கர் கன்மிகளுக்கு ஒலைவரக் காட்டுகையில் இதுக்கு |
| 4 | இவ்வாண்டு முதல் வாடாக் கடமையாக நிறுத்துவித்து மெனியிறுக்கும் பொன் நானூற்று ஐம்பது. இப்பொன் நானூற்றி ஐம்பதும் |
| 5 | ஒன்று முக்காலும் ஒன்று காலுமாக இறுப்பதாக நங்கை பரிப்பார் கொவணவர் கணக்கர் கன்மிகளுக்குச் சொன்னோம். |
| 6 | இப்படிக்குக் கல்லிலும் செம்பிலும் வெட்டிக் குடுப்பது .... இப்படிக் கிவை சைவாபரணபட்டர் எழுத்து. இப்படிக்கு இ |
| 7 | வை மதுரைக்கு வாசகவர் .... எழுத்து இப்படிக்கு ..... எழுத்து அருளாள சுந்தரபிர பாண்டிய பிரமாதரா |
| 8 | யன் எழுத்து. அருளால் வாழவல்லப் பாண்டியப் பிரமாத ராயன் எழுத்து. அருளால் மாடாபதியம் திருமாலை பெருமாள் எ |
| 9 | ழுத்து. அருளால் கொயிற் கணக்குத் தானவினோதமுவே .... னெழுத்து |

## கோயில் திருச்சுற்று நடைபாதையில் வடமேற்று மூலையில் பதிக்கப்பட்டிருக்கும் இரண்டு கற்களில் உள்ள கல்வெட்டு

| வரி எண் | ஸஸ்ரீகோ வ த | வரி எண் | |
|---|---|---|---|
| 1 | | | |
| 2 | ச்சடையமா | 18 | ல எடுத்து பி |
| 3 | றக்குயாண்டுஉ | 19 | பிரதிட்டை செ |
| 4 | இவ்வாண்டுஇ | 20 | யது ஒரு திகு |
| 5 | ராசசிங்கசு | 21 | நொன்தா விள |
| 6 | ளக்கீழ் குண | 22 | க்கு வச்சு |
| 7 | வூர் அய்யன் | 23 | இதனுக்கு |
| 8 | மணக்காடு உ | 24 | குடுத்த சாவா மூவாபே |
| 9 | டையானுக்கு வீ | 25 | ராடு எயருச பத்தஞ் |
| 10 | ர பாண்டிய வீ | 26 | சும் சாத்து வைச்சு நி |
| 11 | ணைமாராயன் | 27 | சதம் நாராய உழக்கா |
| 12 | ஆயின அறை | 28 | ல் உழக்கு நெய் மு |
| 13 | யன் வீர நாரா | 29 | ட்டாமல் அட்டு வா |
| 14 | யணன்மணவாட் | 30 | ன் திருப்பூவணத்து |
| 15 | டி கொம்மன் | 31 | தேவர் வெட்டீக்குடி |
| 16 | சாமி அக்க | 32 | பூவணவன் அறைய |
| 17 | ன் சிரிகோ | 33 | ன் இவனுக்கு |
| | | 34 | தேவன் அ.... |
| | | 35 | .----.. |

## கோயில் கிழக்குப்புறச் சுவரின் வெளியே கிடக்கும் உடைந்த தூணில் உள்ள கல்வெட்டு

| வரி எண் | | வரி எண் | |
|---|---|---|---|
| 1 | ஸஸ்ரீகோ வ த | | |
| 2 | ச்சடையமாறக்கு | 18 | நாராய உழ |
| 3 | யாண்டு உ இதனெதி | 19 | க் கால் நி |
| 4 | ர்உ இவ்வாண்டு | 20 | யதி உரி |
| 5 | திருப்பூவணத்து | 21 | ய் நெய் மு |
| 6 | [illegible] சேரமா | 22 | ட்டாமல் |
| 7 | நார் இராசாதித் | 23 | அட்டுவா |
| 8 | தவர்ம்மரா இன கோ | 24 | ன் இவ்வூ |
| 9 | க் கோதை வர்ம்மாவை | 25 | ர் படைத்த |
| 10 | த்த திரு நொந்தா வி | 26 | லைவன்(வி) |
| 11 | ளக்கு ஒன்றினு | 27 | டையாபதி |
| 12 | க்கு பகலும் இரவு | 28 | இவனுக் |
| 13 | ம் முட்டாமல் எரிவதா | 29 | குப்புணை |
| 14 | க வைச்ச ஆடு நூறு | 30 | இவ்வூர் |
| 15 | இவை சாவா மூவாப் | 31 | படைத்தலை |
| 16 | (பேராடா)கப் பகலும் | 32 | வன் நி... |
| 17 | காத்துமே(ச்சு) | 33 | வன் வி |
| | | 34 | ந்தன் இ |
| | | 35 | ----- |

சிவன் சந்நிதியின் வெளிச்சுற்றுப் பிரகாரத்தில் கன்னிமூலையில் உள்ள பிள்ளையாருக்கு கீழே உடைந்த நிலையில் மிகவும் பழமையான கல்வெட்டு ஒன்று உள்ளது.

இக்கல்வெட்டு மட்டும் பெரியதாக இப்படத்தில்
காட்டப்பெற்றுள்ளது.

மிகவும் பழமையான இக்கல்வெட்டு கி.பி. 6 ம் நூற்றாண்டுக்கு முந்தையதாகக் கருதப்படுகிறது. இக்கல்வெட்டு
வட்டெழுத்துக்களால் எழுதப் பெற்றுள்ளது.

## திருப்பூவணம் பட்டயம்

பட்டயத்தில், பாண்டிய மன்னன் குலசேகரன் 25வது ஆண்டில் (1214 நவம்பர் 20உ) பல பழைய ஊர்களை ஒன்று சேர்த்து அரச கெம்பீர சதுர்வேதிமங்கலம் என்ற பெயருடன் அமைக்கப் பெற்றதும் அதன் எல்லைகள் பழைய வழக்கப்படி ஒரு பெண் யானையின் மீது குறிப்பிடப்பட்டதும் – செய்தி உள்ளது.

இப்பட்டயத்தின் வழியாக சடாவர்மன் குலசேகரனது ஆட்சிக்காலம் சரியாகக் கணிக்கப்படுவதாலும், அரசனுக்கு இராசகெம்பீரன் என்ற பட்டப்பெயர் காணப்படுவதாலும், யானையின் மேல் ஊர் எல்லைகள் குறிப்பிடப்படும் செய்தி உள்ளதாலும் இப்பட்டயம் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதப்பெறுகிறது.



ஐந்து நிலையிலான இராச கோபுரம்
(2002-ம் ஆண்டு குடமுழுக்கு விழாவிற்கு முன்பு
எடுக்கப்பட்ட படம்)

## கோயில் நிர்வாகம்

பாண்டிய நாட்டின் தலைநகராக விளங்கிய மதுரையின் கிழக்கு எல்லையான திருப்பூவணத்தில் கோட்டை அமைத்து, கிழக்கு வாயில் வைத்து ஆட்சிசெய்தனர். பின்னர் நாயக்கர்கள் ஆட்சியிலும் மதுரையை ஆண்ட மன்னர்களின் நிர்வாகத்தில் திருக்கோயில் இருந்தது. கி.பி.1695ம் ஆண்டு மைசூர் மன்னன் மதுரைமீது போர் தொடுத்தபோது திருமலைநாயக்கருக்கு

உதவியாக இராமநாதபுர மன்னரான இரகுநாத சேதுபதியும் போரிட்டார். வெற்றி கிடைத்தது. இவ்வெற்றியைப் பாராட்டும் முகமாக திருப்பூவணம், திருச்சுழி, பள்ளிமடம் ஆகிய பகுதிகள் மதுரை மன்னரால் இராமநாதபுர மன்னருக்கு வழங்கப்பட்டன. பின்னர், கி.பி.1710ல் இராமநாதபுர மன்னர் கிழவன் சேதுபதி இறந்தபின்னர் விஜயரகுநாத சேதுபதி எட்டாவது மன்னரானார். அவர் தனது மகள் அகிலாண்டேசுவரி நாச்சியாரைச் சசிவர்ணத் தேவருக்கு மணமுடித்துவைத்து 1000பேர் கொண்ட படையையும், பிரான்மலை, திருப்பத்தூர், சோழபுரம் மற்றும் திருப்பூவணம் கோட்டைகளைப் பாதுகாத்து நிர்வகிக்கும் உரிமையையும் வழங்கினார். கி.பி. 1730ல் இராமநாதபுர மன்னராகக் கட்டையத் தேவர் ஆட்சிக்கு வந்த போது, இராமநாதபுரச் சீமையிலிருந்து சிவகங்கைச்சீமை உருவாக்கப்பட்டது, திருப்பூவணம் சிவகங்கை மன்னர்களின் நேரடியாட்சியின் கீழ் வந்தது[1].

சிவகங்கை மன்னர்கள் இக்கோவிலின் 'பரம்பரைத் தருமகர்த்தா' ஆவார்கள். சுதந்திர இந்தியாவில், மாட்சிமை பொருந்திய D.சண்முக ராசா அவர்களும், அவருக்குப்பின்னர், D.S.கார்த்திகேய வெங்கடாசலபதி ராசா அவர்களும் நிருவகித்து வந்தனர். தற்போது சிவகங்கைச்சீமையின் இராணியான மாண்புமிகு D.S.K.மதுராந்தகி நாச்சியார் அவர்கள் இக்கோயிலைச் சிறப்புடன் நிருவகித்து வருகிறார்கள். தேவஸ்தான மேலாளராக திரு.பா.இளங்கோ அவர்கள் பணியாற்றிவருகின்றார். சிவகங்கை சமஸ்தானத்திற்கு உட்பட்டு, 108 திருக்கோயில்களும் அதன் உபகோயில்களும், 22 கட்டளைகளும், 20 சத்திரங்களும் உள்ளன.[2]

சிவஸ்ரீ S.சுவாமிநாதபட்டர் – 1 வது ஸ்தானிகம்.

சிவஸ்ரீ T.R.செண்பகபட்டர் – 2 வது ஸ்தானிகம்,

சிவஸ்ரீ D.C.தெய்வசிகாமணி பட்டர் – 4வது ஸ்தானிகம்.

இவர்கள் பரம்பரை பரம்பரையாகக் கோயிலில் சிறப்புடன் திருப்பணியாற்றி வருகின்றனர்[3].

## தினவழிபாடுகளும் திருவிழாக்களும்

இங்கு தினமும் ஆறுகால பூசை நடைபெறுகிறது.

---

[1] www. sivaganga.tn.nic.in/history.htm

[2] www. sivaganga.tn.nic.in/history.htm

[3] குறிப்பு – மூன்றாவது ஸ்தானிகத்திற்கு உரிய முறைமை நாட்களை இரண்டு வீட்டார்கள் தங்களுக்குள் பகிர்வு செய்து கொண்டு சிறப்புடன் பணியாற்றிவருகின்றனர்.

**மாத விழாக்கள்** - வைகாசியில் விசாகவிழா, ஆடித்தபசு விழா, ஆடிமுளைக்கொட்டு உற்சவம், புரட்டாசியில் நவராத்திரிக் கொலு உற்சவம், ஐப்பசியில் கோலாட்ட உற்சவம், கார்த்திகையில் பெரியதீபம், மார்கழித் திருவாதிரையில் ஆருத்ரா தரிசனம், மாசியில் சிவராத்திரி ஆகிய விழாக்கள் கொண்டாடப்படுகின்றன.

**திருவிழாக்கள்** - ஆடியில் முளைக்கட்டுத் திருவிழாவும், பங்குனியில் திருக்கலியாணமும் 10 நாட்கள் சிறப்பாக நடைபெறுகின்றன.

முளைக்கட்டுத் திருவிழாவானது அம்மனுக்கு உகந்த விழாவாக, பிரம உற்சவ விழாவாக நடைபெறுகிறது. ஆடி அமாவாசைக்குப் பிறகு உத்திர நட்சத்திரத்தில் கொடியேற்றத்துடன் முதல்நாள் திருவிழா துவங்கி நடைபெறுகிறது. பத்தாம்நாள் திருவிழா உத்திராட நட்சத் திரத்தில், **தீர்த்தவிழா** நடைபெறுகிறது.

பங்குனியில் நடைபெறும் 10நாள் திருவிழாவே சிறப்பாக அனைவராலும் கொண்டாடப் பெறுகிறது. இவ்விழா, பங்குனியில் அமாவாசை முடிந்தபின் வரும் கார்த்திகை நட்சத்திர தினத்தன்று கொடியேற்றத்துடன் துவங்குகிறது. இத்திருவிழாவில் 6ம் நாள் கீழரத வீதியில் உள்ள கழுவேற்றம்-பொட்டல் என்ற இடத்தில் சமணர்கள் கழுவேறிய நிகழ்ச்சி விழாவாகக் கொண்டாடப் படுகிறது.

7ம் நாள் பிட்சாடணர் உலாவந்து பொதுமக்களிடம் பிச்சை பெறுதல் விழாவாகக் கொண்டாடப் படுகிறது. 8ம் நாள் **திருக்கல்யாணம்** நடைபெறுகிறது. 9ம் நாள் **தேர்த்திருவிழா** நடைபெறுகிறது. ஒரு பெரிய தேரும், ஒரு சிறிய தேரும் இத் திருக்கோயிலுக்கு உள்ளன. 10ம் நாள் இரவு, சுவாமியும் அம்பாளும் காளை வாகனத்தில் திருவீதியுலா வருகின்றனர். இத்துடன் பங்குனித் திருவிழா முடிவடைகிறது.



# தேர்த்திருவிழா

## ஆடித்தபசு விழா

ஒவ்வொரு வருடமும் ஆடிப் பௌர்ணமி முடிந்த மறுநாள் இவ்விழா நடைபெறுகிறது. அன்று காலையில் அம்மன் புறப்பட்டுச் சென்று ஆற்றைக்கடந்து ஆடித்தபசு மண்டபத்தில் வீற்றிருக்கிறார். மாலையில், திருப்பூவணநாதர் புறப்பட்டுச் செல்கிறார். ஆற்றின் குறுக்கே அம்மன் எதிர்கொண்டு அழைத்துச் செல்கிறார். பின்னர் தம்பதிசமேதராக மண்டபத்தில் வீற்றிருந்து மக்களுக்கு அருள்கின்றனர். பின்பு இரவு நேரத்தில் மண்டபத்திலிருந்து அர்த்தசாம பூஜைக்குத் திருக்கோயில் வந்து சேர்கின்றனர். இத்திருவிழா கடந்த பல வருடங்களாக ஆடித்தபசு மண்டபத்தில் நடைபெறாமல் திருக்கோயில் உள்ளேயே நடைபெற்று வருகிறது. 2008ம் ஆண்டிலிருந்து மீண்டும் முன்பு போல் இவ்விழாவை ஆடித்தபசு மண்டபத்தில் சிறப்பாக நடத்துவதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

## இரசவாதம் செய்த திருவிழா

மதுரைத் திருக்கோயிலில் 64 திருவிளையாடல்களும் விழாவாகக் கொண்டாடப்பட்டு வருகின்றன. இதில் 36வது திருவிளையாடலான "இரசவாதம் செய்த படலம்" விழாவிற்கு மதுரையிலிருந்து சுந்தரேசர் சுவாமி புறப்பட்டுத் திருப்பூவணம் பொன்னனையாள் மண்டபத்திற்கு வந்து திரும்புவார். மதுரைக்கும் திருப்பூவணத்திற்கும் இடையேயுள்ள விரகனூர், புளியங்குளம், தட்டாங்குளம் மற்றும் பல ஊர்களில் தேசிய நெடுஞ்சாலையின் ஓரங்களில் இத் திருவிழாவிற்கான மண்டபங்கள் இன்றும் உள்ளன. சுமார் 45 வருடங் களுக்கும் மேலாக இத்திருவிழா நின்றுபோயுள்ளது.



ஸ்ரீ மஹா பஞ்சமுக ப்ரத்யங்கிரா தேவி

சிவகங்கை மாவட்டம் மானாமதுரைக்கு அருகில் வேதியரேந்தல் விலக்கில் உள்ள ஸ்ரீ மகா பஞ்சமுக ப்ரித்யங்கிரா தேவி கோயில், வேததர்ம க்ஷேத்ர டிரஸ்ட் ஸ்ரீலஸ்ரீ ஞானசேகர சுவாமி அவர்களின் திருமுகத்திற்கு இத்திருவிழா தடைபட்டுள்ள செய்தி தெரிவிக்கப் பெற்றது. இதனைக் கேள்வியுற்ற சுவாமிகள், *"இத்திருவிழா, மிகவும் பழமைவாய்ந்த வரலாற்றுச் சிறப்பு மிக்க திருவிழாவாகும். அன்ன தானத்தின் சிறப்பை அனைவருக்கும் எடுத்து இயம்பும் திருவிழாவாகும். சிவபெருமானின் திருவுள்ளத்தில் ஆண், பெண், உயர்ந்தகுலம், தாழ்ந்தகுலம் என்ற பாகுபாடு இல்லை என்பதை நிரூபித்துச் சமுத்துவசமுதாயத்தை வளர்க்கும் நிகழ்ச்சியாகும். மேலும், மதுரையிலிருந்து சிவபெருமான் திருப்பூவணம் வந்து திரும்புவதால், இடைப்பட்ட ஊர்களில் உள்ள மக்கள் அனைவரும் சிவபெருமானின் திருவருளைப் பெறுவர். இக்காரணங்களினால், இத்திருவிழாவை*



மீண்டும் நடத்திட வேண்டியது அவசியமாகும். இவ்வுலக மக்கள் அனைவரும் ஆனந்தமாய் வாழ்வதற்கு வழிவகை செய்யும் பொருட்டு ப்ரத்தியங்கிராதேவி டிரஸ்ட் பொதுமக்களுடன் இணைந்து வரும் 2008ம் ஆண்டு சித்ரா பௌர்ணமி அன்று இத்திருவிழாவை நடத்திடும்" என்று கூறியருளியுள்ளார்.

## குடமுழுக்கு விழா

1932ம் ஆண்டு இக்கோயிலின் திருப்பணிகள் துவங்கி கும்பாபிஷேகம் நடத்தப்பெற்றுள்ளது. அதன் பின்னர் அரசு மான்யம், பொதுமக்களின் நன்கொடை, கோயில் நிதி இவைகளின் உதவியால் சீரமைக்கப்பட்டு, தேவகோட்டை உ.மு. குடும்பத்தாரால் 1961ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 28ம் நாளன்று மகா கும்பாபிஷேகம் நடைபெற்றுள்ளது.

தற்போது இக்கோயில் ரூபாய் 50இலட்சத்திற்கும் அதிகமான பொருட்செலவில் திருப்பணிகள் நிறைவுற்று 2002ம் ஆண்டு சூன்மாதம் 27ம் நாளன்று அட்டபந்தன மகா கும்பாபிசேகம் சிறப்பாக நடைபெற்றது.

## திருப்பணிகள்

திருக்கண் தேவர் என்பவர் அழகிய நாயகருக்கு முன் மண்டபமும், சபாபதி மண்டபமும் கட்டியவர். பூவணலிங்கம் பிள்ளை என்பவர் கொடிக்கம்பத்தையும் அதன் அருகிலுள்ள மண்டபத்தையும் பொன்னொளி வீசுமாறு அமைத்தவர். மற்றும் அம்பிகை கோயிலின் முதற் பிரகாரத் திருமதிலும் மண்டபமும் கட்டுவித்தார். ஈசுவர மூர்த்தியா பிள்ளை என்பவர் மணிகர்ணிகை தீர்த்தக் குளத்தை மக்கள் சுற்றி வருவதற்கேற்ப நடைபாதை (ஆள்வாரி – ஆளோடி), படிக்கட்டு முதலியன அமைத்தவர்.[1]

திருப்பூவணம் சங்கரலிங்கம் அவர்களது மகன் வழக்கறிஞர் சண்முகநாதன் அவர்கள் சிறிய தேருக்குப் பாதுகாப்புச் செய்யும் திருப்பணிக்கு ரூ.10,000–முன்பணமாக அன்பளிப்பு வழங்கியுள்ளார். திருப்பூவணம் இரங்கநாதன் அவர்கள் மகன் சங்கரன் அவர்கள் சிறிய தேரைப் பாதுகாக்கத் தகரம் உபயமாக வழங்கியுள்ளார்.

கோயம்புத்தூர் தொழில் அதிபரும், கற்பகா பொறியியற் கல்லூரியின் தாளாளருமான திருமிகு.இரா. வசந்தகுமார்,B.E. அவர்கள், திருக்கோயிலின் மேல்தளத்தில் தட்டோடு பதிக்கும்

---

[1] திருத்தலங்கள் வரலாறு – பகுதி 1, பதிப்பாசிரியர் – வித்துவான் சு.பாலசாரநாதன், மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம், சென்னை – 600 090

திருப்பூவணநாதர் உலாவும் பாடப்பெற்றுள்ளது. "இப்புலவர் புட்பவணநாதர் வண்ணம், திருப்பூவணத் தலவகுப்பு, தீர்த்தவகுப்பு, மூர்த்தி வகுப்பு என்ற நூல்களையும் திருப்புனவாயிற் புராணம் என்ற நூலையும் இயற்றியுள்ளார்"[1].

திருப்பூவணநாதர் திருஉலாச் சென்ற போது அவரைக் கண்ணுற்ற மாதர்கள் எழுவகைப் பருவத்தினராவர். அவர்கள்,

1) 5 முதல் 7 ஆண்டளவும் பேதை,
2) 8 முதல் 11 ஆண்டளவும் பெதும்பை
3) 12 முதல் 13 ஆண்டு வரை மங்கை
4) 14 முதல் 19 ஆண்டு வரை மடந்தை
5) 20 முதல் 25 ஆண்டு வரை அரிவை
6) 26 முதல் 31 முடிய தெரிவை
7) 32 முதல் 40 ஆண்டு வரை பேரிளம் பெண் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

திருப்பூவணத் தல புராணத்தில் கூறப்பட்டுள்ள வரலாற்றுச் சிறப்புகள் அனைத்தும் திருப்பூவண நாதர் உலாவில் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

## அறிந்து செய்த பாவம்

ஒரு காலத்தில், கயிலையில் பார்வதிதேவி, பரமேசுவரனுடன் மகிழ்ந்திருக்கும் காலத்தில், ஈசன் தேவியின்மீது கோபம் கொண்டான். கோபத்திற்கான காரணம் என்ன? எனத் தேவியார் கேட்டாள், "என் வார்த்தையை மீறித் தக்கன் யாகத்திற்கு நீ சென்றாய், அதனால் என்னுடன் இருப்பதற்கு நீ உரியவள் அல்ல, இப்பாவம் தீர்த்தலரிது, நீ போய்விடு" என்று சிவபெருமான் சினந்து கூறினான், அம்மை ஐயனின் இருதாள் பணிந்து வருந்தி, நான் தவறு செய்து விட்டேன். இப்பாவத்தை எப்படிப் போக்குவது என்று தாங்களே கூறியருள வேண்டுமென வேண்டினாள். அதற்கு ஈசனும் திருவாய் மலர்ந்து, அறிந்தே தவறு செய்தவர்களுக்குப் பாவவிமோசனம் கிடையாது. இருப்பினும், பாண்டிய நாட்டிலுள்ள பூவணம் என்ற தலத்திற்குச் சென்று நீ வழிபடுவாயாக, "***அத்தலத்தில் அல்லால் அறிந்து செய்யும் பாவம் எத்தலத்திலும் தீர்த்தல் அரிது***" எனக் கூறியருளினார். பார்வதி தேவியாரும் திருப்பூவணம் வந்து ஒரு பாரிசாத மரக்கிளையை நட்டுவைத்து

[1] செ.ரெ. இராமசாமிப்பிள்ளை, திருப்பூவணநாதர் உலா, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், பக்கம் 20.

வளர்த்து அதனடியில் அமர்ந்து தவம் செய்தாள். அம்மரத்தின் அடியில் ஈசன் சுயம்புலிங்கமாய் முளைத்து பார்வதிதேவியின் பாவத்தினைப் போக்கியருளினார்.

இவ்வாறு திருப்பூவணத்தில் சுயம்புலிங்கமாய் எழுந்தருளிய பூவணநாதர், பங்குனி உத்திரத் திருநாளில், ஆகம முறைப்படி பூசை முடிந்த பின் இரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட மண்டபத்தில் தன் நாயகியுடன் அமர்ந்தான். வேதங்களும், தேவாரப் பாடல்களும் ஒலித்தன. சயசயவென தேவர்களும், மாமுனிவர்களும் ஒலித்தனர். மயில்இறகினால் ஆன ஆலவட்டக் குடையின் கீழ் சிங்காசனப் பல்லக்கில் ஐயனும் அம்மையும் அமர்ந்திருந்தனர். மீனாட்சி அம்மையின் திருமணத்தின் போது குண்டோதரனின் தாகம் தீர்க்க வேண்டி, "கை–வை" எனக் கூறிக் கங்கையைத் தன் முடியிலிருந்து அவிழ்த்து விட்டான் ஈசன். அது வைகை என்ற பெயரோடு ஓடி வந்தது. அதிலே நீராடியும், சிவகங்கையை ஆண்ட முத்து வடுகநாத துரை அளித்த பொன்போலும் பட்டாடை புனைந்தும், மணிமகுடம் அணிந்தும், மணிகண்டனென்றும் பெயர் விளங்க, மணிகண்டி என்னும் அணியைக் கழுத்தில் அணிந்தும் வீற்றிருந்தனர்.

ஒளிவீசும் அணிகலன்களை அணிந்து நந்திதேவர் பிரம்போசை ஒலிக்க, அடியார் கூட்டம் நெருங்கிக்கொண்டு வாயிலைக் கடந்து சென்றது. அதனிடையே, அன்னப் பறவை போல் சாமரம் வீசத் திருப்பூவணத்துத் தலைவன் வீதி உலா புறப்பட்டனன்.

மூசிக வாகனனாகிய விநாயகப் பெருமானும், மயில் வாகனனாகிய முருகப் பெருமானும், நாற்பத்தி எட்டாயிரம் முனிவர்களும், தில்லைவாழ் அந்தணரும், பொய்யடிமை இல்லாத புலவர்களும், வாயுதேவன், உருத்திர தேவர்கள், கந்தர்வர்கள் எட்டுத்திக்குப் பாலர்களும் உடன்வர, இந்திரன் ஐராவதம் என்னும் வெள்ளை யானையில் வர, ஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோருக்கு அருளியவனும், வரகுண பாண்டியனுக்குச் சிவலோகம் காட்டியவனுமாகிய சிவபெருமான் பலவகை மண்டபங்களையும் கடந்து திருவீதிவுலா சென்றார். சங்கம் முழங்க, யாழிசை ஒலிக்க, குடமுழவம் வாசிக்கப்பட்டது. முகுடு, தடாரி, தக்கை, மொந்தை, பதலை, இரலை, திமிலை ஆகிய முரசங்கள் ஒலித்தன.

மணிகர்ணிகா என்னும் தீர்த்தச் சிவபெருமானை நவக்கிரகங்களும், நட்சத்திரங்களும் வலஞ்செய்து வணங்குகின்றன. பலவினைகளையும் வேரறுக்கக் கூடிய திருப்பூவணநாதர் உலா வந்தார்.

அழகிய மின்னம்மைக்கு வாய்த்த மணவாளன் வந்தானென்று சூரியனின் மனைவியர், சந்திரனின் மனைவியர்

சிவனின் திருக்கூத்தைத் திருவாலங்காட்டில் கண்டு களித்த காரைக்காலம்மையார், பேரிசை ஞானியாம் இசை ஞானியார், பாண்டி மாதேவி மங்கையர்க்கரசியார், பரவை நாச்சியார், சங்கிலி நாச்சியார், ஆகியோரும் உடன் வரத் தேவர்கள் மலர்மாரி பொழிந்தனர்.

மழுவாயுதத்தைக் கையிலேந்திய சிவபெருமான் எழுந்தருளியுள்ள புட்பவனமென்னும் இத்திருத்தலத்தின் புதுமையைக் காண மயில் கூட்டங்கள், குயில் கூட்டங்கள், நட்சத்திரக் கூட்டங்கள், மான் கூட்டங்கள், அன்னக் கூட்டங்கள் போலவும் பெண்கள் கூட்டங் கூட்டமாய் மாடங்களின் முகப்பிலும், மேடையிலும், செய்குன்றுகளிலும் நீர்க்கரையிலும் திண்ணைகளிலும் குழுமி, பலாப்பழத்தில் மொய்க்கும் ஈக் கூட்டங்கள் போல மொய்த்து இருந்தனர். அன்பு உருக கருணை வடிவாக விளங்கும் பூவணத்திறைவனைப் பார்த்துத் தம்மிரு கண்களாலுமீ அவன் அழகைப் பருகினார்கள். தீர்த்த நாயகனாகிய சிவன், தன் திருச்சடையில் அணிந்துள்ள கங்கா தேவியின் தவத்தை எண்ணி வியப்படைந்தனர். இமவானாகிய பர்வதராசனின் புதல்வியான பார்வதிதேவி, மின்னம்மை என்னும் பெயருடன் ஐயனுடன் வரக்கண்டு, அவளுடைய தவத்தை வாழ்த்தினார்கள். தங்களுடைய தவக்குறையை எண்ணி மனம் நொந்தார்கள்.

இறைவன் மீது பக்தியால் காதல் கொண்டு திருநீற்றை அள்ளித் தங்களை அலங்கரித்துக் கொண்டார்கள். இறைவனின் ஒருபாதி தெள்ளமுதம், மறுபாதி விசம் என்றனர். மழை பொழிவதைப் போல், மலர்மாரி பொழியக் கண்டு சோர்வுற்றனர். தேரோட அதன்பின் சென்று கண்களில் பக்திப் பெருக்கால் நீர்வழியப் பெருமூச்சு விட்டனர்.

<u>1, பேதைப் பருவம்</u>

ஒரு பேதைப் பெண், தன் அன்னையிடம் "ஒளி வீசும் இத்தேரில் வருபவர் யார்?" என்று கேட்டாள். "உமையவள் வளர்த்த தெய்வத்தன்மை பொருந்திய பலா மரத்தின் வேரில் பழுத்த கனி"[1] என்று அன்னை கூறினாள். "அப்படியானால் அந்தக் கனியை எனக்குக் கொடு" என்று அப்பேதை அழுதாள். "பேதையே! இக்கனி நம்போன்ற எவர்க்கும் எட்டாக் கனி, உமையம்மைக்குரிய அக்கனியை நாம் அடைய இயலாது. அது எப்போதும் நம் உள்ளத்திலிருப்பது" என்று கூறினாள்.

[1] "தேவி வளர்த்ததிருத் தெய்வப் பலாவடியில்
மேவிப் பழுத்த வியன்கனியென் – றாவலுற" –
திருப்பூவண நாதருலா–பாடல்வரி 195

அப்போது இரதத்தின் மேலிருக்கும் கருணைப்பழமாகிய சிவன் கடந்து சென்றான். பேதையைச் செவிலி தம் இல்லத்திற்கு அழைத்துச் சென்றாள்.

2. பெதும்பைப் பருவம்

எல்லையற்ற பெண்மையின் அழகைச் சிறிது காட்டும் உருவம் கொண்ட பெதும்பைப் பருவத்துப் பெண் ஒருத்தி, தன் தோழியருடன் சென்று திருப்பூவணநாதரை வணங்கினாள். பெருமானின் அழகையெல்லாம் முடிமுதல் அடிவரை பார்த்தாள். அங்கிருந்த தாயாரை நோக்கி, "இறைவனுடைய கன்னத்தில் உள்ள குறி, என்ன குறி?" என்று கேட்டாள். "அன்னை பொன்னனையாள் அள்ளி முத்தங்கொண்ட அடையாளம்" என்று தாய் கூறினாள். இதைக் கேட்ட அப்பெதும்பையின் உள்ளத்தே இறைவன் மீது பக்திக் காதல் தோன்றியது. இந்த நிகழ்ச்சியைக் கண்டவாறு சிவபெருமான் அத்தெருவை விட்டு அகன்றான்.

3. மங்கைப் பருவம்

மங்கைப் பருவமடைந்த பெண் ஒருத்தி, அவளது சிற்றிடை துவண்டு ஆட, வாளைக் கையில் கொண்ட வீரம்மிக்க இளைஞர்களை மையல் பிணியால் மயக்கும் விழியினாள், அனைத்து அழகும் அமையப் பெற்றவள். அவள் திருப்பூவண நாதரின் திருமார்பினையும் திருநீறு பூசிய மேனியினையும், அழகையும் கண்டு வணங்கினாள். கண்ணில் நீர்பொழிய, முற்றும் உடல் பூரிக்க, முன்னால் நின்று இறைவனை அண்ணார்ந்து பார்த்துச் சடைமுடியை உடைய தலைவனைத் தன் உள்ளத்தே பதித்தாள். இறைவன் மீது மிக்க பக்தி கொண்டு தன் பக்தியைத் தன் தோழியருக்கு எடுத்துரைத்தாள். "அன்னையராகிய செவிலியர் நம்மைத் தடுத்தது கொடுஞ்சகுனம்" என்றாள். இவ்வாறாக வருந்திப் புலம்பினாள். ஐயனின் தேர் அவ்விடத்திலிருந்து அகன்றது.

4. மடந்தைப் பருவம்

சீவி முடித்த அழகிய கூந்தலையும், கூர்மையான விழிகளையும், சிவந்த மென்மையான உதடுகளையும்,

ஒளிபொருந்திய நெற்றியையும் உடையவள். மன்மதனே கைகுவித்து வணங்கும் தெய்வ வடிவுடையவளாய் இருந்தாள். பூமிதேவியின் புதல்வி போன்ற அவள், பூவணநாதரின் தேரை எதிர் நோக்கி ஓர் வீதியில் நின்றிருந்தாள்.

வேதங்கள் ஒலிக்க, வீணை இசைக்க, முனிவர்களின் பத்தினிகள் பல்லாண்டு பாடத் திருப்பூவணநாதர் அவ்வீதியில் உலா எழுந்தருளினார். அண்ணலைக் கண்ட இம் மடந்தைப் பெண், குமுதமலர் போல் உள்ளம் மலர்ந்து, விமலரே! என்று விளித்துக் கண்களில் நீர் ததும்ப உள்ளம் பக்திக் காதல் கொள்ள, உமக்கு அபயம் என்றாள். இவற்றை எல்லாம் உமாதேவியாருடன் கண்ட சிவபெருமான் அவ்வீதியிலிருந்து கிளம்பிச் சென்றார்.

5. அரிவைப் பருவம்

நறுமணம் வீசும் அழகிய நீண்ட கூந்தலையுடையவள். தங்கத்தை உருக்கிப் புடமிட்ட அமுதூறும் பருவத்தையுடைய கன்னிப் பெண் ஒருத்தி, அவ்வீதியில் தேரினை எதிர்கொண்டு நின்றாள்.

நீண்ட சடைமுடியையும், ஒளிபொருந்திய அக்கினியையும் உடைய சிவபெருமானுக்கு மூன்று கண்கள்தான் உள்ளன. ஆனால், இந்தக் கன்னியின் அழகையெல்லாம் காணவேண்டுமானால் அவர் உடல் முழுவதும் கண் வேண்டும் என்று அவளைப் பார்த்தவர்கள் கூறினர். தன் அழகுக்கு யாரும் ஈடாகாத திருச்சிற்றம்பலவாணன், உனது அழகைக் காண நாளை வருவான் என்று சிலர் அவளிடம் கூறிச் சென்றனர். அந்த அழகிய பெண்ணும்,"நமச்சிவாய" என்று மந்திரத்தைக் கூறி இரவைக் கழித்தாள். பெருமானும் காலையில் மின்னனையாளின் இல்லத்தைக் கடந்து வீதிக்கு வந்தான். புட்பவன நாதரின் ஒளி பொருந்திய நெற்றிக் கண்ணைக் கண்டு வாயார வாழ்த்தினாள். அவள் உள்ளம் மகிழ்ச்சியில் திளைத்தது. திருத்தேர் அவ்வீதியைக் கடந்தது.

6. தெரிவைப் பருவம்

"ஞானமே பேரின்பம்", "பரம்பொருளே பேரானந்தம்" என்று கூறும் அடியார்களின் எண்ணத்தை மாற்றும்படியான அழகுடைய தெரிவைப் பருவத்தையுடைய ஒருபெண் நின்று கொண்டிருந்தாள். மிகுந்த புகழையுடைய திருப்பூவணத்தின் எழிலைப் போல் அவளது அழகு அமைந்திருந்தது. அவள் ஓவியரை அழைத்து, "திருப்பூவணநாதர் பொன்னனையாளுக்கு அருள் பாலித்த கதையை ஓவியமாகத் தீட்டுக" என்று கேட்டாள். இறைவனது திருவடிவத்தைத் தன் மனத்தில் ஓவியமாக வரைந்து அழகு பார்த்துக் கண்ணில் நீர் மல்கினாள். பிட்டுக்கு மண் சுமந்து

வைகையாற்றின் நீரை அடைத்தீரே! என் கண்ணீர் ஊற்றை உம்மால் மறிக்க இயலாதா? எனப் புலம்பினாள். அப்பொழுது, இறைவனுக்கு அணிவிக்கப் பெற்ற கொன்றை மாலையை அவளுக்குக் கொடுத்தனர். அவள் அதனைப் பெற்றுக் கொண்டு நடக்கலானாள். உடனிருந்த தோழியர் அவளுடைய இந்த நிலையை எண்ணி மகிழ்ந்தனர்.

7.பேரிளம்பெண்

இரதியைப் போன்ற மிகுந்த அழகையுடைய பேரிளம் பெண் ஒருத்தி தேரோடும் வீதியில் பூவணநாதரின் வருகைக்காக ஏங்கி நின்றிருந்தாள். பிரமனுக்கும், இந்திரனுக்கும், திருமாலுக்கும், தேவர்களுக்கும் தலைவனான வைகை நதித்தீரன், மணிகர்ணிகைத் தீர்த்தன் தேரில் பவனி வரும் அழகைக் கண்டாள். "அத்தேர் தெருவில் ஓடாமல் அவ்விடத்திலேயே இருக்க வேண்டும்" என்று வணங்கினாள். பாண்டிய நாட்டின் பழம்பதியான திருப்பூவணத்தில் கோயில் கொண்டுள்ள புண்ணியனே, நான் அளிக்கும் இம்மலர் மாலையை ஏற்றுக் கொள்வாயாக என வேண்டி நின்றாள். அவள் அளித்த மலர் மாலையைப் பூவணநாதர் ஏற்றுக் கொண்டபின் தேரானது ஓடத் துவங்கியது.

பேதை முதற்கொண்டு பேரிளம் பெண் ஈறாக உள்ள ஏழு பருவத்துப் பெண்களும் பக்திகொண்டு பரவசமடைய, வினைகளை எல்லாம் தீர்க்கும் தலைவன், அடியார் குழாம் நீங்காத சந்நிதியின் கோமான், அதிரும் முழவுஅறாத கோயிலின் முதல்வன், விழா நீங்காத தேரையுடைய தலைவன், திருப்பூவணக் காசி என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் உலாச் சென்றான்.

திருப்பூவணநாதருலாவில், திருப்பூவணத் தலத்தின் சிறப்பும், எழுவகைப் பெண்களின் அழகும், அவர்கள் பூவணநாதரின் மீது கொண்டிருந்த காதலும், தேர்த்திருவிழாவும், தேரில் எழுந்தருளியிருந்த இறைவனின் அழகும் அருளும் திறமும் சிறப்பாக எடுத்துக் கூறப்பெற்றுள்ளன.

*****

# 10. திருப்பூவணக் காசி

## மனிதரில் எத்தனை நிறங்கள்

உலகெங்கிலும் வாழும் மனிதர்கள் அனைவருக்கும் ஒரு தலை, இரண்டு கண்கள், இரண்டு காதுகள், ஒரு வாய், கழுத்து, இரண்டு தோள்கள், உடல், இரண்டு கால்கள் என உடலமைப்பு ஒன்றாகவே உள்ளது. ஆனால் உடலின் நிறம், உயரம், பருமன் ஆகியவற்றாலும், உள்ளத்தினாலும் மனிதர்கள் கோடானகோடி வகைகளாகப் பிரிந்துள்ளனர். பொதுவாக, அனைவருக்கும் கையில் ஐந்துவிரல்கள் இருக்கும், ஆனால் விரல்களில் உள்ள ரேகைகள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருவிதமாகத் தனித் தன்மையுடன் இருக்கும்.

அதே போன்று, உலகெங்கிலும் உள்ள சிவலிங்கங்கள் எல்லாம் ஒன்றே என்றாலும், அவைகள் தோன்றியதற்கான காரணம், தோன்றிய இடம், வணங்கி வழிபட்டோர், அவர்கள் அடைந்த பயன்கள் போன்ற பல காரணிகளால் ஒவ்வொரு சிவலிங்கமும் ஒவ்வொருவகையில் சிறப்புப் பெற்றதாய் அமைந்திருக்கும்.

## பிதுர் முத்தி புறம்[1]

பிறந்தால் முத்தி, பார்த்தால் முத்தி, நினைத்தால் முத்தி, வசித்தால் முத்தி, வணங்கினால் முத்தி, இறந்தால் முத்தி என்று ஒவ்வொரு திருத்தலமும் ஒவ்வொரு வகையில் சிறப்புப் பெற்றதாகத் திகழ்கின்றன.

---

[1] தற்போது "முக்தி" என்றும் கூறுகின்றனர். ஆனால் திருப்பூவணப் புராணத்தில் "முத்தி" என்றே உள்ளது.

திருப்பூவணத் திருத்தலம் பிதுர்களுக்கு (இறந்துவிட்ட முன்னோர்களுக்கு) முத்தி அளிப்பதில் சிறப்புப் பெற்ற திருத்தலமாக உள்ளது.

கங்கை நதிக்கரையில் காசி எவ்வளவு சிறப்புடையதோ அதைவிடச் சிறப்புடன் வைகை நதிக்கரையில் திருப்பூவணம் விளங்குகின்றது. முத்தியாச்சிரமம், தட்சிணகாசி, பிதிர்முத்திபுரம் என்று பல்வேறு பெயர்களால் பல்வேறு காலங்களில் இத்திருத்தலம் அழைக்கப் பெற்றிருக்கிறது"[1].

## கங்கையும் காசியும்

சூரிய வம்சத்தில் தோன்றிய மன்னன் சகரன். அவன் அஸ்வமேத யாகம் செய்தான். இதனால் இந்திரன் தனது பதவி பறிபோய்விடும் எனப் பயந்து அஸ்வமேத யாகக் குதிரையைத் திருடி, இமாலயத்தில் கடும் தவமியற்றி வந்த கபிலர் என்ற மகரிஷியின் ஆசிரமத்தில் கட்டிவைத்து விட்டான். குதிரையைத் தேடிவந்த சகரனின் புதல்வர்கள் முனிவரைத் துன்புறுத்தினர். இதனால் கோபம் கொண்ட முனிவர், ராசகுமாரர்களையும் அவர்களுடன் வந்த அனைவரையும் தனது கோபப்பார்வையால் எரித்துச் சாம்பல் ஆக்கிவிட்டார். தனது பிள்ளைகள் அனைவரும் ஒட்டுமொத்தமாக இறந்துவிட்டதனால் மனமுடைந்த சகர மன்னன் தனது பேரன் **அம்சுமான்** என்பவனுக்கு முடிசூட்டிவிட்டு கானகம் சென்று தவம் செய்து முத்தியடைந்தான். அம்சுமானின் அரண்மனைக்கு வந்த மகரிஷிகள் அனைவரும் சகரனின் புத்திரர்கள் நற்கதி அடைய வேண்டுமானால் எரிந்து போன அவர்களின் சாம்பல் மீது தேவர்களின் உலகில் பாய்ந்து செல்லும் கங்கையின் நீரைத் தெளித்தால் மட்டுமே சாபவிமோசனம் பெற்று நற்கதி அடைய முடியும் என்று கருத்துத் தெரிவித்தார்கள்.

கங்கையை பூமிக்குக் கொண்டுவர அம்சுமானால் முடியவில்லை. அவனது மகன் **அசமஞ்சனாலும்** முடியவில்லை. ஆனால் அசமஞ்சனின் மைந்தன் **பகீரதன்** தனது முன்னோர்களின் ஆன்மாக்கள் முத்தியடையக் கங்கையைப் பூமிக்குக் கொண்டுவரவேண்டித் கடுந்தவம் செய்தான். அவனது தவத்தை ஏற்று கங்கா தேவியும் பூமிக்கு வரச் சம்மதித்தாள். சிவபெருமான் தனது திருமுடியில் கங்கையை விழச்செய்து பூமியில் நதியாக ஓடச் செய்தார். இவ்வாறு ஓடிய கங்கை நதியில் பகீரதனின் முன்னோர்களின் அஸ்திகள் கரைக்கப்பட்டன. இதனால் அவர்கள் முத்தி பெற்றனர்.

[1] கந்தசாமிப்புலவர். திருப் பூவணப் புராணம், சூரியன் பூசனைச் சருக்கம்

அன்றிலிருந்து கங்கையில் அஸ்தியைக் கரைத்து முன்னோர்களின் ஆன்மாக்களை முத்தியடையச் செய்து வருகின்றனர் [1].

இவ்வாறு முத்தியளிப்பதில் **கங்கை, அசி, அருணை** ஆகிய மூன்று மகத்தான புண்ணிய நதிகளுக்கு மத்தியில் அமைந்த ஈடிணையற்ற திருத்தலம் **வாரணாசி** அல்லது **காசி** எனப் புகழ் பெற்றது. இங்கு இறப்பவர்களுக்குச் சிவபிரான் தாரகமந்திரமாகிய பிரணவ மந்திரத்தை உபதேசம் செய்தருளுவர்; ஆதலால் அந்திமக்காலத்தில் (வாழ்க்கையின் இறுதிக் காலத்தில்) காசியில் வசித்து மக்கள் இறக்கலாயினர்.

## கங்கையே – வைகை

மீனாட்சி திருக்கல்யாணத்தின்போது விருந்து உண்டு களித்த குண்டோதர பூதத்தின் தாகத்தைத் தணிக்கத் தண்ணீர் தேவைப்பட்டது. எனவே சிவபெருமான் குண்டோதரனிடம் '**கை–வை**' எனச் சொல்லித் தனது சடாமுடியிலிருந்த கங்கையை சிறிது அவிழ்த்து விட்டார். கங்கை நதியானது, பாண்டியநாட்டின் தலைநகரான மதுரையில் வைகை நதியாக ஓட ஆரம்பித்தது.

## திருப்பூவணமும் காசியும்

கங்கை நதிக்கரையில் காசி எவ்வளவு சிறப்புடையதோ அதைவிடச் சிறப்புடன் வைகை நதிக்கரையில் திருப்பூவணம் விளங்குகின்றது. திருப்பூவணநாதர் தனது மார்பில் எலும்பினால் ஆன மாலையைப் பூணூலாக அணிந்துள்ளார். இதனை

"..... செத்தவர் தம் எலும்பினாற் செறியச் செய்த
பூணாணும் அரைநாணும் பொலிந்து தோன்றும்
பொழில் திகழும் பூவணத் தெம் புனிதனார்க்கே"

என்றும்

"பொல்லாத புலால் எலும்பு பூணாய்த் தோன்றும்
பொழில் திகழும் பூவணத்தெம் புனிதனார்க்கே" [2]

என்றும் திருநாவுக்கரசு நாயனார் திருத்தாண்டப் பதிகத்தில் குறிப்பிட்டுள்ளார்.

[1] - திரு ஏ.எம். ராஜகோபலன், ஆசிரியர், குமுதம் சோதிடம், 24–10–2003 இதழுடன் இலவச இணைப்பு

[2] - தேவாரம் – திருப்பூவணம் – திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய திருத்தாண்டகம் – பாடல் எண் 2 மற்றும் 3

## காசிக்கு வீசம் கூட

காசித்திருத்தலத்தில் இறந்தால் முத்தி என்று புகழ்ந்து பேசப்படுகிறது. ஆனால் திருப்பூவணத்திருத்தலத்தில் இறந்தோரின் அங்கங்களில் ஏதேனும் ஒரு சிறுதுண்டு விழுந்துபட்டால் கூட முத்தி கிடைக்கும் என்று புராணங்களில் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது.[1]

காசியில் கிடைத்திடும் பலன்கள் எல்லாம் திருப்பூவணத்திலும் கிடைத்திடும். இதில் ஐயம் ஏதும் இல்லை என்று திருப்பூவணப் புராணத்தில் குறிப்பிடப்பெற்றுள்ளது.[2]

பாவங்களைப் போக்கிட காசி சென்று இறைவனை வணங்கி வருகின்றனர். ஆனால், சிலர் காசியிலேயே பாவங்களைச் செய்கின்றனர். இவ்வாறு காசியில் செய்யும் பாவங்கள் அங்குள்ள கங்கையில் தீர்த்தமாடி காசி விசுவநாதரை வணங்கினாலும் நீங்கமாட்டா. ஆனால், இப் பாவங்கள் திருப்பூவணத்திருத்தலத்திற்கு வந்து இறைவனை வணங்கினால் நீங்கிவிடும். மேலும் இத்திருப்பூவணத்திற் செய்த பாவம் இத்திருப்பூவணத்திலே ஒழியுமென்று நாரதமுனிவர் கூறியதாக திரணாசனன் முத்தி பெற்ற சருக்கத்திலே கூறப்பெற்றுள்ளது.

பிற திருத்தலங்களிலிருந்து வயோதிக காலத்தில் திருப்பூவணம் வந்து சேர்ந்து இறந்தவர்களுக்குச் சிவபிரான் தாரகமந்திரமாகிய பிரணவ மந்திரத்தை உபதேசம் செய்தருளுவர்; ஆதலால் அந்திமக்காலத்தில் (வாழ்க்கையின் இறுதிக் காலத்தில்) திருப்பூவணத் தலத்தில் யாவரும் வசித்தல் வேண்டும். காசியின் தட்பவெப்பத்தினால் பெரிதும் உடல் வருந்தும். ஆனால், திருப்பூவணத்தில் சமநிலையிலான தட்பவெப்பம் நிலவுவதால், உடல் வருத்தமுறாது; ஆதலாற் காசிப்பதியினும் புட்பவனம் ஏற்றதாகும்.[3]

1 - திருப்பூவணப் புராணம் – மணிகன்னிகைச் சருக்கம் – பாடல் எண்கள் 37 முதல் 41 முடிய

2 - "காசிகெயை யீசனடி காமர் புனன் மூழ்கி
நேசமொடிறைஞ்சினர் ணேர்ந்த பலனெல்லாம்
பூசுரர்களாசை தருபூவண மெனும்பே
ராசில் பதி வந்தடை யுமைய மிலையம்மா"
திருப்பூவணப் புராணம் – திரணாசனன் முத்தி பெற்ற சருக்கம் - பாடல் எண் 81

3 - "மருவிய காசி வாசமக்கண் மிக்குடல் வருந்தும்
பொருவிறென் பூவணந்தான் பொருந்திடா மெய்வருத்த
மரியன பொருளொன் றில்லை யாதலாலைந்தவித்தீர்

தருமஞ்ஞன், தன்னுடைய தந்தைக்கு இறுதிக் கடமைகளை அன்புடன் முடித்துப் பிதாவின் அஸ்தியை ஒரு குடத்திலே அடைத்துத் துணியினாலே வாயை மூடி அரக்கு முத்திரை வைத்துக் கங்கைநதியிலே கரைக்க வேண்டி அவனது மாணாக்கனோடு வடதிசை நோக்கிச் சென்றான். செல்லும் வழியில் திருப்பூவணம் வந்துசேர்ந்தான். இங்கு, அக்குடம், மணிகன்னிகைத் தீர்த்தத்தில் விழுந்துவிட்டது. எடுத்துப் பார்க்கும்போது அதனுள்ளே எலும்பு இல்லாமல் தாமரை மலரும், உற்பல மலருமாக இருந்தன. தருமஞ்ஞன், இதைக் கண்டு பெரிதும் மகிழ்ந்து பர்ணசாலைகளிலே வசிக்கின்ற முனிவர்களிடம் போய் நிகழ்ந்தவற்றைக் கூறினான். அவர்களும் உனது தந்தையும், உனது முன்னோர்களும் முத்தி அடைந்தனர். இத்தலம் காசியைவிடச் சிறப்புடையது என்றனர்.[1]

நளச்சக்கரவர்த்தி மனைவி மைந்தருடன் நால்வகைச் சேனைசூழத் தீர்த்தயாத்திரைக்குப் புறப்பட்டான். கேதாரம் காசி முதலிய தலங்களை அடைந்து, தீர்த்தமாடிச் சிவலிங்க மூர்த்திகளைத் தரிசித்து, மதுரையை அடுத்துத் திருப்பூவணம் சேர்ந்து சுவாமியையும் அம்மையையும் தரிசனஞ் செய்து வழிபட்டான். திருப்பூவணத்தின் மகிமையையும் அப்பதிக்குத் தான்வந்த பின்னர்த் தனக்குண்டாகிய மனநிம்மதியையும் உணர்ந்து ஈசனை வணங்கி இத்திருப்பூவணத்தலத்திலேயே தங்கினான். இதனால் நள மகராசா காலத்திலிருந்தே திருப்பூவணத்திருத்தலம் காசியினும் சிறப்பாகக் கருதப்பட்டு வருகிறது.

*கருதிலப் பூவண ந்தான் காசியில் மிகுதியாகும்"*
*திருப்பூவணப் புராணம் – மணிகன்னிகைச் சருக்கம் – பாடல் எண் 35*

[1] - *"பாசமோசனதீர்த்த மென்பது பண்டு கண்டது கேட்ட தாய்க்*
*காசி மாநகரத்தினும் மிது கட்டுரைத் திட வொண்ணுமோ*
*பேசின் முன்னமருந் தவஞ் செய் பிதாக்களுங் கதி பெற்றனர்*
*பூசுராதிபர் போற்றுமிப் பதி பூர்வ மாமிது புகலிலே"*
*திருப்பூவணப் புராணம் – தருமஞ்ஞன் முத்தி பெற்ற சருக்கம் – பாடல் எண் 22*

## பூவண நாதரை வணங்கிப் பயன் அடைந்தோர் மற்றும் அடைவோர் பட்டியல்

1) கதிரோன் (சூரியன்) திருப்பூவணநாதருக்குப் பூசைசெய்து வணங்கி வழிபட்டு நவக்கிரகங்களுக்குத் தலைவனாகத் தொடர்ந்து இருக்கும் வரத்தைப் பெற்றுள்ளான்.

   எனவே, ஆட்சி, அதிகாரம், அரசியல் இவற்றில் தங்களது தலைமை தொடர விரும்புபவர்கள் திருப்பூவணநாதரை வணங்கி வரம் பெறலாம்.

2) பிரம்மதேவன் காமஉணர்வு மிகப்பெற்று ஊர்வசியை உற்று நோக்கினான். அதனால் உண்டான சாபம் நீங்க திருப்பூவணநாதரை வணங்கி வழிபட்டு விமோசனம் பெற்றான்.

   எனவே காமஇச்சை மிகப்பெற்றோர் அதனை நீக்கி, நல்ல எண்ணத்துடன் வாழ்ந்திடத் திருப்பூவண நாதரை வணங்கிடலாம்.

3) மகாவிஷ்ணு, சலந்திரனைக் கொல்ல சக்கராயுதம் பெற்ற திருத்தலம்.

   எனவே விரோதிகளைச் சமாளிக்கத் தேவையான யுக்திகளைப் பெறலாம்.

4) காளிதேவி, சிவலிங்கம் வைத்துப் பூசித்த திருத்தலம்.

   எனவே, கணவருடன் சபதம் கூறிச் சண்டை செய்த பெண்களின் பாவங்கள் நீங்கப் பெறும். காளியை வணங்கும் பக்தர்கள் அனைவரும் இச்சிவலிங்கத்தை வழிபட்டு நற்பயன்களை அடையலாம்.

5) திரணாசனன் என்பவன் வீடு பேறு அடைந்துள்ளான். துன்மஞ்ஞன் என்ற மகாபாவி நற்கதி அடைந்துள்ளான்.

   எனவே, மனநிலை பாதிக்கப்பட்டவர்களும், தீயோரும், திருடர்களும் தாங்கள் செய்த பாவங்கள் நீங்கப்பெற்று நல்லபுத்தியும் நல்வாழ்க்கையும் பெறலாம்.

6) தருமஞ்ஞன் என்ற அந்தணன் கொண்டு வந்த அஸ்திக் கலசத்தில் இருந்த எலும்புகள் பூவாய் மாறிய திருத்தலம்.

   எனவே, தங்களது முன்னோர்களின் ஆன்மாக்கள் சாந்தியடைந்து முத்தி பெற திருப்பூவணத் திருத்தலத்திலே அஸ்தியைக் கரைக்க வேண்டும்.

7) உற்பலாங்கி என்ற பெண் நல்ல கணவனை அடையப்பெற்று தீர்க்க சுமங்கலியாய் வாழும் வரம் பெற்றுள்ளாள்.

   எனவே, இளம்பெண்கள் இங்கு வந்து இறைவன் இறைவியை வணங்கி நல்லகணவனைப் பெறும் வரம் பெறலாம்.

8) செங்கமலன் என்பவனின் பாவங்கள் அனைத்தையும் நீக்கிய திருத்தலம்.
எனவே நாம் அறிந்தும், அறியாமலும் செய்த பாவங்கள் இங்கு நீங்கும்.
9) திருமகளின் (இலக்குமி தேவியின்) சாபம் தீர்த்த இடம்
எனவே, பெரியவர்களையும், முற்றும் துறந்தவர்களையும் அவமதித்துக் கேலிபேசிய பாவங்கள் இங்கு நீங்கும்.
10) பார்வதி தேவியார் இறைவன் திருவருள் வேண்டித் தவம் செய்த திருத்தலம்
எனவே, கணவரின் சொற்களை மதியாமல் செயல்பட்ட பெண்களின் பாவம் இங்குள்ள சிவலிங்கத்தை வழிபடுவதால் நீங்கப்பெறும்.
11) சுச்சோதி அரசனுடைய பிதுர்கள் (இறந்த முன்னோர்கள்) நேரில் வந்து பிண்டம் (இறந்தவர்களுக்குப் படைக்கப்படுவது) பெற்றுக்கொண்டு, அரசனை ஆசிர்வதித்த திருத்தலம்.
எனவே, பிதுர்கள் முத்தி பெற இங்கு பிண்டம் வைத்துத் தர்ப்பணம் செய்து பலனடையலாம்.

12) திருப்பூவணநாதருக்கு அலரிப்பூ கிடைக்கக் காரணமாய் இருந்த சலந்திரன் என்ற தவளைக்குச் சக்கரவர்த்தியாய் இருக்கும் வரம் அருளப்பட்ட திருத்தலம்
எனவே, தூய நல் மலர்களைக் கொண்டு திருப்பூவணநாதரை வணங்கி வழிபட்டு நாடாளும் வரங்கள் பெறலாம்.
13) நள மகாராசாவிடமிருந்த கலிகாலத்தின் கொடுமையை அகற்றி அவனுக்கு மனச்சாந்தி அளித்த திருத்தலம்.
எனவே "ஆயிரம் இருந்தும் – வசதிகள் இருந்தும் – மனநிம்மதி இன்றித் தவிப்பவர்கள் திருப்பூவணம் வந்து இறைவனை வணங்கி மன நிம்மதி பெறலாம்.
14) மாந்தியந்தின முனிவருக்கும் தியானகாட்ட முனிவருக்கும் சிவபெருமான் சிதம்பர நல் உபதேசம் வழங்கிய இடம். மேலும் வித்தியாஈசுவரர், சரசுவதிதேவியார் திருவுருவங்கள் உள்ளன.
எனவே மாணவர்கள் இவர்களை வணங்கி கல்வியில் நல்ல முன்னேற்றம் அடையலாம். மேலும், குருஉபதேசம் பெறச் சிறந்த சிவத்தலம்.
15) தாழம்பூ பொய்சொன்ன பாவம் நீங்க வேண்டி, சிவபெருமானை வணங்கி வழிபட்ட திருத்தலம்.
எனவே, இறைவனிடமும், பிறரிடமும் பொய்சொன்ன பாவம் நீங்கப் பெறும்.

16) மூவேந்தர்களும் (சேர, சோழ, பாண்டிய மன்னர்கள்) ஒன்றாக வந்து வழிபட்ட திருத்தலம்.
எனவே, மக்களால் தேர்ந்தெடுக்கப்பெற்று தமிழகத்தின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுள்ளோர் பூசிக்க வேண்டிய திருத்தலம்.

17) திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் (அப்பர்), சுந்தரர், மாணிக்கவாசகர், கருவூர்த் தேவர், அருணகிரி நாதர் ஆகியோர் வணங்கிப் பாடிய திருத்தலம்.
எனவே, அவர்கள் வழியில் அடியார்கள் அனைவரும் திருப்பூவண நாதரை வணங்கிப் பயனடையலாம்

18) மதுரை சோமசுந்தரப் பெருமானே சித்தர்வடிவில் திருப்பூவணம் வந்து இரசவாதம் செய்து திருப்பூவணநாதர் உற்சவமூர்த்தியைச் செய்யத் தேவையான தங்கத்தைத் தயாரித்துக் கொடுத்துத் திருவிளையாடல் செய்துள்ளார்.
எனவே மதுரை மக்கள் அனைவரும் இத்தலம் வந்து மதுரைச் சிவபெருமான் தங்கம் தயாரித்துக் கொடுத்துச் செய்யப்பெற்ற "திருப்பூவணநாதர் உற்சவ மூர்த்தியை" வணங்கி வழிபட்டுப் பயன் பெற வேண்டும்.

19) பொன்னனையாளுக்கு அருள் வழங்கிய திருத்தலம்.
எனவே பெண்கள் எந்தக் குலத்தில் பிறந்தாலும், எவருடன் வாழ்ந்தாலும், திருப்பூவணத்திருத்தலத்திற்கு வந்து இறைவனுக்கு அர்ச்சனைகள் செய்து, அவரது அடியார்களுக்கு அன்னதானம் செய்து கிடைத்தற்கரிய இறைவனின் அருளைப் பெறலாம்.

20) கோரக்கர் சித்தர் மற்றும் கத்தரிக்காய் சித்தர் போன்ற சித்தர்கள் வாழும் சிவபூமி.
எனவே, சித்தர்களை வணங்குவோர் இங்கு வந்து இச்சித்தர்களை வணங்கி நல்லருள் பெறலாம்.

21) இங்கு சனீசுவரர் தனிச்சந்நிதியில் இருந்து அருளுகிறார். எனவே, சென்மச்சனி, கண்டச்சனி, ஏழரைச்சனி (ராசிக்கட்டத்தில், 12,1 மற்றும் 2ம் இடங்களில் சனி இருப்பதால் உண்டாகும் தோசம்), அர்த்த அட்டமச் சனி(ராசிக்கட்டத்தில் நான்காம் கட்டத்தில் சனி இருப்பதால் உண்டாகும் தோசம்), அட்டமச்சனி (எட்டாம் இடத்தில் சனி இருப்பதால் உண்டாகும் தோசம்) ஆகிய தோசங்களையுடையோர் வந்து வணங்கி வேண்டிய நல்வரங்களைப் பெறலாம்.

திருப்பூவணத்தில் உள்ள சிவலிங்கத்தின் பழமையைக் குறிக்கும் வகையில்

**"பூமிக்கும் முந்தியவர் பூவண நாதர்**
**ஆற்றுக்கும் முந்திய அழகுமீனா"**

என்றோர் மக்கள் வழக்குச் சொல் உள்ளது. இதன் பொருள் – நெருப்புப்பிழம்பாக இருந்த பூமி உருண்டையானது குளிர்ந்து இப்போது நாம் வசிக்கும் நிலப்பகுதி உருவாவதற்கு முன்பே திருப்பூவணத்தில் சிவலிங்கம் தோன்றிவிட்டது. மேலும் வைகையாறு தோன்றுவதற்கு முன்பே திருப்பூவணத்தில் சௌந்தரநாயகி (அழகு=சௌந்தரம், மீனா=நாயகி) அம்மன் தோன்றிவிட்டார்.

*"புகலரிய கேதாரமலை காசி மாகாளம் புட்கரஞ்சீர்*
*திகழ்கமலாலயந் தில்லை வனந்தீதில் வேதவனந் திருவெண்காடு*
*மகிழ்தரு தென்மதுரை தனின்மருவுகதியைப் பெறுவான்வைகுவோர்சேர்*
*மிகுபலமானவை யனைத்து மேவுவர் பூவணநகரின் மேவுவோரே"*[1]

கேதாரமலை, காசி, மாகாளம், காஞ்சி, கமலாலயம், தில்லை, வேதவனம், திருவெண்காடு, மதுரை இவ்வூரில் உள்ள திருக்கோயில்களை வழிபட்டுக் கிடைக்கும் ஒட்டு மொத்தப்பலனை விடக் கூடதலான பலன் திருப்பூவணத்திற்கு வந்து வழிபட்டால் கிடைக்கும் என்று திருப்பூவணப்புராணத்திலே முனிவர்களால் புகழ்ந்து கூறப்பட்டுள்ளது.

எனவே மிகவும் பழமையான சுயம்புலிங்கமாகிய திருப்பூவண நாதரின் திருவடிகளை மக்கள் அனைவரும் வணங்கி வழிபடவேண்டும். நலன்கள் அனைத்தும் பெறவேண்டும்.

**"வாழ்க மன்னவன் செங்கோன் மழைமுகில்**
**வாழ்க நான்மறை வாணர்கணானிலம்**
**வாழ்க வைதிக சைவமலர்திரு**
**வாழ்க வஞ்செழுத்துண்மை நன்மந்திரம்"**

*திருச்சிற்றம்பலம்*
*சுபம்.*



[1] *திருப்பூவணப்புராணம், தீர்த்தச் சருக்கம், பாடல்* 16

# பின்னிணைப்பு

1)திருஞான சம்பந்தர் பாடல்கள்
2)திருநாவுக்கரசர் பாடல்கள்
3)சுந்தரர் பாடல்கள்
4)கருவூர்த் தேவர் பாடிய திருவிசைப்பா
5)அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ்
6)திருவிளையாடற் புராணம் – இரசவாதம் செய்த படலப் பாடல்கள்
7)திருவிளையாடற் புராணம் – திருவாலவாயான படலப் பாடல்கள்
8) திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணப் பாடல்கள்
9)திருப்பூவணத்தைப் பற்றி வேறு தலங்களில் வழங்கும் தேவாரப் பாடல்கள்

ஆகியன பின்னிணைப்புகளாக உள்ளன.

(குறிப்பு – தேவாரப் பாடல் வரிகள் திருப்பூவணப் புராணப் புத்தகத்திலிருந்தபடியே இங்கு அச்சிடப்பட்டுள்ளன)

## திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியது

(1–ம் திருமுறை)
**பண் தக்கேசி**

*திருச்சிற்றம்பலம்*

அறையார் புனலு மாமலரு மாடர வார்சடைமேற்
குறையார் மதியஞ் சூடி மாதோர் கூறுடை யானிடமா
முறையான் முடிசேர் தென்னர் சேரர் சோழர் கடாம் வணங்குந்
திறையா ரொளிசேர் செம்மை யோங்கு தென்றிருப்பூவணமே (1)

மருவார் மதின்மூன் றொன்ற வெய்து மாமலை யான்மடந்தை
யொருபால் பாக மாகச் செய்த வும்பர் பிரானவனூர்
கருவார் சாலியாலை மல்கிக் கழன்மன்னர் காத்தளித்த
திருவான் மலிந்த சேடர் வாழுந் தென்றிருப்பூவணமே (2)

போரார் மதமா வுரிவை போர்த்துப் பொடியணி மேனியனாய்க்
காரார் கடலி னஞ்ச முண்ட கண்ணுதல் விண்ணவனூர்
பாரார் வைகைப் புனல்வாய் பரப்பிப் பன்மணி பொன் கொழித்துச்
சீரார் வாரி சேர நின்ற தென்றிருப் பூவணமே (3)

கடியா ரலங்கற் கொன்றை சூடிக் காதிலொர் வார் குழையன்
கொடியார் வெள்ளை யேறு கந்த கோவண வன்னிடமாம்
படியார் கூடி நீடி யோங்கு பல்புக ழூற் பரவச்
செடியார் வைகை சூழ நின்ற தென்றிருப் பூவணமே (4)

கூரார் வாளி சிலையிற் கோத்துக் கொடிமதில் கூட்டழித்த
போரார் வில்லி மெல்லிய லாளோர் பால் மகிழ்ந் தானிடமா
மாரா வன்பிற் றென்னர் சேரர் சோழர்கள் போற்றிசைப்பத்
தேரார் வீதி மாட நீடு தென்றிருப் பூவணமே (5)

நன்று தீதென் றொன்றி லாத நான்மறை யோன்கழலே
சென்று பேணி யேத்த நின்ற தேவர் பிரானிடமாங்
குன்றி லொன்றி யோங்க மல்கு குளிர்பொழில் சூழ் மலர்மேற்
றென்ற லொன்றி முன்றி லாருந் தென்றிருப் பூவணமே (6)

பைவா யரவ மரையிற் சாத்திப் பாரிடம் போற்றிசைப்ப
மெய்வாய் மேனி நீறு பூசி யேறுகந் தானிடமாங்
கைவாழ் வளையார் மைந்த ரோடுங் கலவியினா னெருங்கிச்
செய்வார் தொழிலின் பாட லோவாத் தென்றிருப்பூவணமே (7)

மாட வீதி மன்னிலங்கை மன்னனை மாண்பழித்துக்
கூட வென்றி வாள்கொ டுத்தாள் கொள்கையி னார்க் கிடமாம்
பாட லோடு மாட லோங்கிப் பன்மணி பொன் கொழித்து
வோடி நீரால் வைகை சூழு முயர்திருப் பூவ்ணமே (8)

பொய்யா வேத நாவி னானும் பூமகள் காதலனுங்
கையாற் றொழுது கழல்கள் போற்றக் கனலெரி யானவனூர்
மையார் பொழிலின் வண்டு பாட வைகை மணி கொழித்துச்
செய்யார் கமலந் தேன ரும்புந் தென்றிருப் பூவணமே (9)

அலையார் புனலை நீத்த வருந்தே ருமன் புசெய்யா
நிலையா வண்ண மாய வைத்த நின்மலன் றன்னிடமா
மலைபோற் றுன்னி வென்றி யோங்கு மாளிகை சூழ்ந்தயலே
சிலையார் புரிசை பரிசு பண்ணுந் தென்றிருப்பூவணமே (10)

திண்ணார் புரிசை மாட மோங்கு தென்றிருப் பூவணத்துப்
பெண்ணார் மேனி யெம்மி றையைப் பேரிய லின் றமிழா
னண்ணா ருட்கக் காழி மல்கு ஞானசம் பந்தன்சொன்ன
பண்ணார் பாடல் பத்தும் வல்லார் பயில்வது வானிடையே (11)

திருச்சிற்றம்பலம்

# திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியது

**(3–ம் திருமுறை)**
**பண் – காந்தார பஞ்சமம்**

திருச்சிற்றம்பலம்

மாதமர் மேனிய னாகி வண்டொடு
போதமர் பொழிலணி பூவணத்துறை
வேதனை விரவல ரரண மூன்றெய்த
நாதனை யடிதொழ நன்மை யாகுமே (1)

வானணி மதிபுல்கு சென்னி வண்டொடு
தேனணிபொழிற்றிருப் பூவ ணத்துறை
யானநல் லருமறை யங்க மோதிய
ஞானனை யடிதொழ நன்மை யாகுமே (2)

வெந்துய ருறுபிணி வினைக ளர்வதோர்
புந்தியர் தொழுதெழு பூவ ணத்துறை
யந்திவெண் பிறையினோ டாறு சூடிய
நந்தியை யடிதொழ நன்மை யாகுமே (3)

வாசநன் மலர்மலி மார்பில் வெண்பொடிப்
பூசனைப் பொழி றிகழ் பூவ ணத்துறை
யீசனை மலர்புனைந் தேத்து வார்வினை
நாசனை யடிதொழ நன்மை யாகுமே (4)

குருந்தொடு மாதவி கோங்கு மல்லிகை
பொருந்திய பொழிற் றிருப் பூவணத்துறை
யருந்திற லவுணர்த மரண மூன்றெய்த
பெருந்தகை யடிதொழப் பீடை யில்லையே (5)

வெறிகமழ் புன்னைபொன் ஞாழல் விம்மிய
பொறியர வணி பொழிற் பூவ ணத்துறை
கிறிபடு முடையினன் கேடில் கொள்கைய
னறுமல ரடி தொழ நன்மை யாகுமே (6)

பறைமல்கு முழவொடு பாட லாடலன்
பொறைமல்கு பொழிலணி பூவ ணத்துறை
மறைமல்கு பாடலன் மாதொர் கூறின
னறைமல்கு கழ றொழ வல்ல லில்லையே (7)

வரைதனை யெடுத்தவல் லரக்க னீண்முடி
விரற னி லடர்த்தவன் வெள்ளை நீற்றினன்
பொருபுனல் புடையணி பூவ ணந்தனைப்
பரவிய வடியவர்க் கில்லை பாவமே (8)

நீர்மல்கு மலருறை வானு மாலுமாய்ச்
சீர்மல்கு திருந்தடி சேர கிற்கிலர்
போர்மல்கு மழுவினன் மேய பூவண
மேர்மல்கு மலர்புனைந் தேத்த லின்பமே (9)

மண்டை கொண் டுழிதரு மதியி றேரருங்
குண்டருங் குணம்பல பேசுங் கோலத்தர்
வண்டமர் வளர்பொழின் மல்கு பூவணங்
கண்டவ ரடி தொழு தேத்தல் கன்மமே (10)

புண்ணியர் தொழுதெழு பூவ ணத்துறை
யண்ணலை யடிதொழு தந்தண் காழியு
ணண்ணிய வருமறை ஞான சம்பந்தன்
பண்ணிய தமிழ்சொலப் பறையும் பாவமே (11)

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசு சுவாமிகள் பாடியது

## திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

வடிவேறு திரிசூலந் தோன்றுந் தோன்றும்
வளர்சடைமே லிளமதியந் தோன்றுந் தோன்றுங்
கடியேறு கமழ் கொன்றைக் கண்ணி தோன்றுங்
காதில்வெண் குழைதோடு கலந்து தோன்று
மிடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்று
மெழி றிகழுந் திருமுடியு மிலங்கித் தோன்றும்
பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும்
பொழி றிகழும் பூவணத்தெம் புனிதனார்க்கே (1)

ஆணாகிப் பெண்ணாய வடிவு தோன்று
மடியவர்கட் காரமுத மாகித் தோன்று

மூணாகி யூர் திரிவா னாகித் தோன்று
மொற்றைவெண் பிறைதோன்றும் பற்றார் தம்மேற்
சேணாக வரைவில்லா லெரித்த றோன்றுஞ்
செத்தவர்த மெலும்பினாற்செ றியச் செய்த
பூணாணு மரைநாணும் பொலிந்து தோன்றும்
பொழி றிகழும் பூவணத் தெம் புனித னார்க்கே. (2)

கல்லாலின் னீழற்க லந்து தோன்றுங்
கவின்மறையோர் நால்வர்க்கு நெறிக ளன்று
சொல்லாகச் சொல்லியவா தோன்றுந் தோன்றுஞ்
சூழரவு மான்மறியுந் தோன்றுந் தோன்று
மல்லாத காலனைமுன் னடர்த்த றோன்று
மைவகையா னினைவார்பா லமர்ந்து தோன்றும்
பொல்லாத புலாலெலும்பு பூணாய்த் தோன்றும்
பொழி றிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. (3)

படைமலிந்த மழுவாளு மானுந் தோன்றும்
பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை தோன்று
நடைமலிந்த விடையோடு கொடியுந் தோன்று
நான்மறையி னொலி தோன்று நயனந் தோன்று
முடைமலிந்த கோவணமுங் கீழுந் தோன்று
மூரல்வெண் சிரமாலை யுலாவித் தோன்றும்
புடைமலிந்த பூதத்தின் பொலிவு தோன்றும்
பொழி றிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே (4)

மயலாகுந் தன்னடியார்க் கருளுந் தோன்று
மாசிலாப் புன்சடைமேன் மதியந் தோன்று
மியல்பாக விடுபிச்சை யேற்ற றோன்று
மிருங்கட னஞ் சுண்டிருண்ட கண்டந் தோன்றுங்
கயல்பாயக் கடுங்கலுழிக் கங்கை நங்கை
யாயிரமா முகத்தினொடு வானிற் றோன்றும்
புயல் பாயச் சடைவிரித்த பொற்புத் தோன்றும்
பொழி றிகழும் பூவணத் தெம் புனித னார்க்கே (5)

பாராழி வட்டத்தார் பரவி யிட்ட
பன்மலரு நறும்புகையும் பரந்து தோன்றுஞ்
சீராழித் தாமரையின் மலர்க ளன்ன
திருந்தியமா நிறத்தசே வடிக டோன்று
மோராழித் தேருடைய விலங்கை வேந்த
னுடல் றுணித்த விடர்பாவங் கெடுப்பித் தன்று
போராழி முன்னீந்த பொற்புத் தோன்றும்
பொழி றிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே (6)

தன்னடியார்க் கருள் புரிந்த தகவு தோன்றுஞ்
சதுர்முகனைத் தலையரிந்த தன்மை தோன்று
மின்னனைய நுண்ணிடையாள் பாகந் தோன்றும்
வேழத்தி னுரிவிரும்பிப் போர்த்த றோன்றுந்
துன்னியசெஞ் சடைமேலோர் புனலும் பாம்புந்
தூயமா மதியுடனே வைத்த றோன்றும்
பொன்னனைய திருமேனி பொலிந்து தோன்றும்
பொழி றிகழும் பூவணத் தெம் புனித னார்க்கே (7)

செறிகழலுந் திருவடியுந் தோன்றுந் தோன்றுந்
திரிபுரத்தை யெரிசெய்த சிலையுந் தோன்று
நெறியதனை விரித்துரைத்த நேர்மை தோன்று
நெற்றிமேற் கண்டோன்றும் பெற்றந் தோன்று
மறுபிறவி யறுத்தருளும் வகையுந் தோன்று
மலைமகளுஞ் சலமகளு மலிந்து தோன்றும்
பொறியரவு மிளமதியும் பொலிந்து தோன்றும்
பொழி றிகழும் பூவணத் தெம் புனித னார்க்கே (8)

அருப்போட்டு முலைமடவாள் பாகந் தோன்றும்
மணிகிளரு முருமென்ன அடர்க்குங் கேழன்
மருப்போட்டு மணிவயிரக் கோவை தோன்று
மணமலிந்த நடந்தோன்று மணியார் வைகைத்
திருக்கோட்டி னின்றதோர் திறமுந் தோன்றுஞ்
செக்கர்வா னொளிமிக்குத் திகழ்ந்த சோதிப்
பொருப்போட்டி நின்றதிண் புயமுந் தோன்றும்
பொழி றிகழும் பூவணத் தெம் புனித னார்க்கே (9)

ஆங்கணைந்த சண்டிக்கு மருளி யன்று
தன்முடிமேல லர்மாலை யளித்தல் தோன்றும்
பாங்கணைந்து பணிசெய்வார்க் கருளி யன்று
பலபிறவி யறுத்தருளும் பரிசுந் தோன்றுங்
கோங்கணைந்த கூவிளமு மதமத் தம்முங்
குழற்கணிந்த கொள்கையொடு கோலந் தோன்றும்
பூங்கணைவே ளுருவழித்த பொற்புத் தோன்றும்
பொழி றிகழும் பூவணத் தெம் புனித னார்க்கே (10)

ஆருருவ வுள்குவா ருள்ளத் துள்ளே
யவ்வுருவாய் நின்கின்ற வருளுந் தோன்றும்
வாருருவப் பூண்முலைநன் மங்கை தன்னை
மகிழ்ந் தொருபால் வைத்து கந்த வடிவுந் தோன்றும்
நீருருவக் கடலிலங்கை யரக்கர் கோனை
நெறுநெறென வடர்த்திட்ட நிலையுந் தோன்றும்

போருருவக் கூற்றுதைத்த பொற்புத் தோன்றும்
பொழி றிகழும் பூவணத் தெம் புனித னார்க்கே (11)

திருச்சிற்றம்பலம்
(இத் திருப்பதிகம் அகத்திய முனிவர் திரட்டியருளிய தேவாரத் திரட்டிற் சேர்ந்த சிறப்புடையது)

## சுந்தரர் பாடியது

**பண் – இந்தளம்**

திருச்சிற்றம்பலம்

திருவுடை யார்திரு மால யனாலு
முருவுடை யாருமை யாளையொர் பாகம்
பரிவுடை யா ரடை வார்வினை தீர்க்கும்
புரிவுடை யாருறை பூவண மீதோ. (1)

எண்ணி யிருந்து கிடந்து நடந்து
மண்ண லெனாநினை வார்வினை தீர்ப்பார்
பண்ணிசை யார்மொழி யார்பலர் பாடப்
புண்ணிய னாருறை பூவண மீதோ. (2)

தெள்ளிய பேய்பல பூதம வற்றோடு
நள்ளிரு ணட்டம தாட நவின்றோர்
புள்ளுவ ராகு மவர்க்கவர் தாமும்
புள்ளுவ னாருறை பூவண மீதோ. (3)

நிலனுடை மான்மறி கையது தெய்வக்
கனலுடை மாமழு வேந்தியோர் கையி
லனலுடை யா ரழ கார்தரு சென்னிப்
புனலுடை யாருறை பூவண மீதோ. (4)

நடையுடை நல்லெரு தேறுவர் நல்லார்
கடைகடை தோறிடு மின்பலி யென்பார்
துடியிடை நன்மட வாளொடு மார்பிற்
பொடியணி வாருறை பூவண மீதோ. (5)

மின்னனை யாடிரு மேனிவி ளங்கவொர்
தன்னமர் பாகம தாகிய சங்கரன்
முன்னினை யார்புர மூன்றெரி யூட்டிய
பொன்னனை யானுறை பூவண மீதோ (6)

மிக்கிறை யேயவ றுன்மதியால் விட
நக்கிறை யேவிர லாலிற வூன்றி
நெக்கிறை யேநினை வார்தனி நெஞ்சம்
புக்குறை வானுறை பூவண மீதோ (7)

(பாடல் 8–9 கிடைக்கப்பெறவில்லை)
சீரின் மிகப்பொலி யுந்திருப் பூவண
மாரவி ருப்பிட மாவுறை வானை
யூர னுரைத்த சொன்மாலைகள் பத்திவை
பாரி லுறைப்பவர் பாவ மறுப்பரே (10)

திருச்சிற்றம்பலம்

## மாணிக்கவாசகர் பாடல்கள்
## திருவாசகத்தில் திருப்பூவணம் என்ற தலைப்பில் இப்புத்தகத்தின் ஆறாம் பகுதியில் உள்ளன.

## கருவூர்த் தேவர் பாடியது

### ஒன்பதாம் திருமுறை
பண் – பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

திருவருள் புரிந்தா ளாண்டு கொண் டிங்ஙன்
சிறியனுக் கினியது காட்டிப்
பெரிதருள் புரிந்தா னந்தமே தருநின்
பெருமையிற் பெரியதொன் றுளதே
மருதர சிருங்கோங் ககின்மரஞ் சாடி
வரைவளங் கவர்ந்திழி வைகைப்
பொருதிரை மருங்கோங் காவண வீதிப்
பூவணங் கோயில்கொண் டாயே. (பாடல் – 144)

பாம்பணைத் துயின்றோ னயன்முதற் றேவர்
பன்னெடுங் காலநிற் காண்பா
னேம்பலித் திருக்க வென்னுளம் புகுந்த
வெளிமையை யென்றுநான் மறக்கேன்

தேம்புனற் பொய்கை வானளவாய் மடுப்பத்
தெளிதரு தேறல்பாய்ந் தொழுகும்
பூம்பணைச் சோலை யாவண வீதிப்
பூவணங் கோயில்கொண் டாயே. (பாடல் – 145)

கரைகட லொலியிற் றமருகத் தரையிற்
கையினிற் கட்டிய கயிற்றா
லிருதலை யொருநா வியங்கவந் தொருநா
ளிருந்திடா யெங்கள்கண் முகப்பே
விரிதிகழ் விழவின் பின்செல்வோர் பாடல்
வேட்கையின் வீழ்ந்தபோ தவிழ்ந்த
புரிசடை துகுக்கு மாவணவீதிப்
பூவணங் கோயில்கொண் டாயே. (பாடல் – 146)

கண்ணியன் மணியின் குழல்புக் கங்கே
கலந்துபுக் கொடுங்கினேற் கங்ங
னுண்ணியை யெனினு நம்ப நின்பெருமை
நுண்ணிமை யிறந்தமை யறிவன்
மண்ணியன் மரபிற் றங்கிருண் மொழுப்பின்
வண்டினம் பாடநின் றாடும்
புண்ணிய மகளி ராவண வீதிப்
பூவணங் கோயில் கொண் டாயே. (பாடல் – 147)

கடுவினைப் பாசக் கடல்கடந் தைவர்
கள்ளரை மெள்ளவே துரந்து
னடியிணை யிரண்டு மடையுமா றடைந்தே
னருள்செய்வா யருள்செயா தொழிவாய்
நெடுநிலை மாடத் திரவிருள் கிழிக்க
நிலைவிளக் கலகில்சா லேகம்
புடைகிடந் திலங்கு மாவண வீதிப்
பூவணங் கோயில்கொண் டாயே. (பாடல் – 148)

செம்மனக் கிழவோ ரன்பு தாஎன்றுன்
சேவடி பார்த்திருந் தலச
வெம்மனங் குடிகொண் டிருப்பதற் கியானா
ரென்னுடை யடிமைதானி யாதே
யம்மனங் குளிர்நாட் பலிக்கெழுந் தருள
வரிவைய ரவிழ்குழற் சுரும்பு
பொம்மென முரலு மாவண வீதிப்
பூவணங் கோயில் கொண் டாயே. (பாடல் – 149)

சொன்னவின் முறைநான் காரண முணராச்
சூழல்புக் கொளித்தநீ யின்று
கன்னவின் மனத்தென் கண்வலைப் படுமிக்
கருணையிற் பெரியதொன் றுளதே
மின்னவில் கனக மாளிகை வாய்தல்
விளங்கிளம் பிறைதவழ் மாடம்
பொன்னவில் புரிசை யாவண வீதிப்
பூவணங் கோயில்கொண் டாயே. (பாடல் – 150)

பூவணங் கோயில் கொண்டெனை யாண்ட
புனிதனை வனிதை பாகனை வெண்
கோவணங் கொண்டு வெண்டலை யேந்தும்
குழகனை யழகெலா நிறைந்த
தீவணன் றன்னைச் செழுமறை தெரியு
திகழ்கரு வூரனே னுரைத்த
பாவணத் தமிழ்கள் பத்தும்வல் லார்கள்
பரமன துருவமா குவரே. (பாடல் – 151)

திருச்சிற்றம்பலம்

## திருப்பூவணம் முருகன் மீது
## அருணகிரி நாதர் பாடிய
## திருப்புகழ்

<u>திருப்புகழ் பாடல் எண். 550</u>

தனத்தான தத்தத் தனதானா
தனத்தான தத்தத் தனதானா

அறப்பாவை அத்தற் கருள்பாலா
அளித்தாது வெட்சித் திருமார்பா
குறப்பாவை அற்பிற் புணர்வோனே
குலத்தேவ வர்க்கப் பரிபாலா
மறப்பாத கத்துற் றுழல்வேனோ
மலர்த்தாள்வ முத்தக் க்ருபையீவாய்
சிறப்பான முத்திக் கொருவாழ்வே
திருப்பூவ ணத்திற் பெருமாளே

**திருப்புகழ் பாடல் எண். 551**

| | | | |
|---|---|---|---|
| தானனதான | தானனதான | தானனதான | தனதான |
| வானவராதி | யோர்சிறைமேவ | மாவலியேசெய் | திருசூரன் |
| மார்பிருகூற | தாய்விடவாரி | | விடுதீரா |
| | | வாய்விடவேலை | |
| கானவர்பாவை | காதலனான | காசணிபார | தனமார்பா |
| காலனைமோது | காலகபால | காளகளேசர் | தருபாலா |
| தேனமர்நீப | மாலைவிடாத | சேவகஞான | முதல்வோனே |
| தீயகுணாதி | பாவிநினாது | சேவடிகாண | அருள்வாயே |
| போனகசாலை | யாதுலர்வாழ | வீதிகடோறும் | நனிமேவு |
| பூவணமான | மாநகர்வாழு | நாதகுகேச | பெருமாளே |

(காளகளேசர் = விசத்தைக் கண்டத்திலுடையவர்
போனகம் = அன்னம்)

**திருப்புகழ் பாடல் எண். 552**

| | | | |
|---|---|---|---|
| தந்தத்தத் | தானன | தானன | |
| தந்தத்தத் | தானன | தானன | |
| தந்தத்தத் | தானன | தானன | தனதானா |
| பந்தப்பொற் | பாரப | யோதர | |
| முந்தச்சிற் | றாடைசெய் | மேகலை | |
| பண்புற்றுத் | தாளொடு | வீசிய | துகிலோடே |
| பண்டைச்சிற் | சேறியில் | வீதியில் | |
| கண்டிச்சித் | தாரொடு | மேவிடு | |
| பங்குக்கைக் | காசுகொள் | வேசையர் | பனிநீர்தோய் |
| கொந்துச்சிப் | பூவணி | தோகையர் | |
| கந்தக்கைத் | தாமரை | யாலடி | |
| கும்பிட்டுப் | பாடிசை | வீணையர் | அநுராகங் |
| கொண்டுற்றுப் | பாயலின் | மூழ்கிய | |
| சண்டிச்சிச் | சீயென | வாழ்துயர் | |
| குன்றப்பொற் | பாதக்ரு | பாநிதி | அருள்வாயே |
| அந்தத்துக் | காதியு | மாகியு | |
| மந்திக்குட் | டானவ | னானவ | |
| னண்டத்தப் | பாலுற | மாமணி | ஒளிவீசும் |
| அங்கத்தைப் | பாவைசெய் | தேயுயர் | |
| சங்கத்திற் | றேர்தமி | ழோதிட | |

| | | | |
|---|---|---|---|
| அண்டிக்கிட் | டார்கமு | வேறினர் | ஒருகோடி |
| சந்தத்திக் | காளுநி | சாசரர் | |
| வெந்துட்கத் | தூளிப | டாமெழ | |
| சண்டைச்சொற் | றார்பட | வேவயில் | விடுவோனே |
| தங்கச்சக் | ராயுதர் | வானவர் | |
| வந்திக்கப் | பேரரு | ளேதிகழ் | |
| தம்பப்பொற் | பூவண | மேவிய | பெருமாளே |

*****

# பரஞ்சோதி முனிவர் அருளிய திருவிளையாடற் புராணம்

## 36. இரசவாதஞ் செய்த படலம் (கலி நிலைத்துறை)

### திருப்பூவணத் தலத்தின் பெருமை

1856 வரதன் மீனவன் படையிடை வந்துநீர்ப் பந்தர்
விரத னாகிநீ ரருத்திய வினையுரை செய்தும்
பரத நூலிய நாடகப் பாவையா ளொருத்திக்
கிரத வாதஞ்செய் தருளிய வாடலை யிசைப்பாம்.

1857 பருங்கை மால்வரைப் பூழியன் பைந்தமிழ் நாட்டின்
இரங்கு தெண்டிரைக் கரங்களா லீர்ம்புனல் வையை
மருங்கின னந்தன மலர்ந்தபன் மலர்கடுய்ப் பணியப்
புரங்க டந்தவ னிருப்பது பூவண நகரம்

1858 எண்ணி லங்குறை சராசர மிலிங்மென் றெண்ணி
விண்ணி னாள்களும் கோள்களும் விலங்குவ தியாக்கைக்
கண்ணி னான்கதிர் முதற்பல கடவுளர் பூசை
பண்ணி வேண்டிய நல்வர மடைந்ததப் பதியில்

### பொன்னனையாளின் தன்மை

1859 கிளியு ளார்பொழிற் பூவணக் கிழவர்தங் கோயில்
றளியு ளார்தவப் பேறனா டாதுகு பூந்தார்
அளியு ளார்குழ லணங்கனா ளந்தரத் தவர்க்குங்
களியு ளார்தர மயக்குறூஉங் கடலமு தனையாள்

1860 நரம்பி னேழிசை யாழிசைப் பாடலு நடநூல்
நிரம்பு மாடலும் பெண்ணல நீர்மையும் பிறவும்
அரம்பை மாதரை யொத்தன ளறனெறி யொழுகும்
வரம்பி னாலவர் தமக்குமே லாயினாண் மன்னோ

1861 ஆய மாதர்பேர் பொன்னனை யாளென்ப வவடன்
நேய வாயமோ டிரவிரு ணீங்குமு னெழுந்து
தூய நீர்குடைந் துயிர்புரை சுடர்மதிக் கண்ணி
நாய னாரடி யருச்சனை நியமமு நடாத்தி

1862 திருத்தர் பூவண வாணவரைச் சேவித்துச் சுத்த
நிருத்த மாடிவந் தடியரைப் பொருளென நினையுங்
கருத்த ளாயருச் சித்தவர் களிப்பவின் சுவையூண்
அருத்தி யெஞ்சிய தருந்துவா ளஃதவ ணியமம்

1863 மாத ரிந்நெறி வழங்குநாண் மற்றவ ளன்பைப்
பூத லத்திடைத் தெருட்டுவான் பொன்மலை வல்லி
காத னாயகன் றிருவுருக் காணிய வுள்ளத்
தாத ரங்கொடுத் தருளினார் பூவணத் தையர்

1864 ஐயர் தந்தபே ரன்புரு வாயினாண் மழுமான்
கையர் தந்திரு வுருவினைக் கருவினாற் கண்டு
மைய கண்ணினாள் வைகலும் வருபொரு ளெல்லாம்
பொய்யி லன்புகொண் டன்பர்தம் பூசையி னேர்வாள்

1865 அடியர் பூசனைக் கன்றியெஞ் சாமையா லடிகள்
வடிவு காண்பதெப் படியென்று மடியிலச் செழியற்
கொடியில் பொற்கிழி நல்கிய வள்ளலை யுன்னிப்
பிடிய னாளிருந் தாளஃ தறிந்தனன் பெருமான்

**சிவபெருமான் சித்தர் வடிவம் கொண்டு வருதல்**

1866 துய்ய நீறணி மெய்யினர் கட்டங்கந் தொட்ட
கையர் யோகபட் டத்திடைக் கட்டினர் பூதிப்
பையர் கோவண மிசையசை யுடையினர் பவளச்
செய்ய வேணிய ரங்கொரு சித்தராய் வருவார்

1867 வந்து பொன்னனை யாண்மணி மாளிகை குறுகி
அந்த மின்றிவந் தமுதுசெய் வாரொடு மணுகிச்
சிந்தை வேறுகொண் டடைந்தவர் திருவமு தருந்தா
துந்து மாளிகைப் புறங்கடை யொருசிறை யிருந்தார்

1868 அமுது செய்தருந் தவரெல்லா மகலவே றிருந்த
அமுத வாரியை யடிபணிந் தடிச்சிய ரைய
அமுது செய்வதற் குள்ளெழுந் தருள்கென வுங்கள்
அமுத னாளையிங் கழைமினென் றருளலு மனையார்

1869 முத்த ராமுகிழ் வாணகை யல்குலாய் முக்கண்
அத்த ரானவர் தமரெலா மமுசெய் தகன்றார்
சித்த ராயொரு தம்பிரான் சிறுநகை யினராய்
இத்த ராதலத் தரியரா யிருக்கின்றா ரென்றார்

**சித்தமூர்த்தி பொன்னனையாளை மெலிந்த காரணம் யாதெனல்**

1870 நவம ணிக்கலன் பூத்தபூங் கொம்பரி னடந்து
துவரி தழ்க்கனி வாயினாள் சுவாகதங் கிலாவன்
றுவமை யற்றவர்க் கருக்கிய மாசன முதவிப்
பவம கற்றிய வடிமலர் முடியுறப் பணிந்தாள்

1871 எத்த வஞ்செய்தே னிங்கெழுந் தருளுதற் கென்னாச்
சித்தர் மேனியும் படிவெழிற் செல்வமு நோக்கி
முத்த வாணகை யரும்பநின் றஞ்சலி முகிழ்ப்ப
அத்தர் நோக்கினா ரருட்கணா லருள்வலைப் பட்டாள்

1872 ஐய உள்ளெழுந் தருளுக வடிகணீர் ரடியேன்
உய்ய வேண்டிய பணிதிரு வுளத்தினுக் கிசையச்
செய்ய வல்லனென் றஞ்சலி செய்யவுண் ணகையா
மைய னோக்கியை நோக்கிமீ னோக்கிதன் மணாளன்

1873 வடியை நேர்விழி யாய்பெரு வனப்பினை சிறிதுன்
கொடியை நேரிடை யெனவிளைத் தனையெனக் கொன்றை
முடியி னானடி யாரமென் முகிழ்முலைக் கொடிதாழ்ந்
தடிய னேற்குவே றாயொரு மெலிவிலை யையா

1874 எங்க ணாயகர் திருவுருக் காண்பதற் கிதயந்
தங்கு மாசையாற் கருவுருச் சமைத்தனன் முடிப்பேற்கு
கிங்கு நாடொறு மென்கையில் வரும்பொரு ளெல்லாம்
உங்கள் பூசைக்கே யல்லதை யொழிந்தில வென்றாள்

**சித்த மூர்த்திகள் சிவனடியார் பெருமை கூறல்**

1875 அருந்து நல்லமு தனையவ ளன்புதித் திக்கத்
திருந்து தேனென விரங்குசொற் செவிமடுத் தையர்
முருந்து மூரலாய் செல்வமெய் யிளமைநீர் மொக்குள்
இருந்த வெல்லையு நிலையில வென்பது துணிந்தாய்

1876 அதிக நல்லற நிற்பதென் றறிந்தனை யறத்துள்
அதிக மாஞ்சிவ புண்ணியஞ் சிவார்ச்சனை யவற்றுள்
அதிக மாஞ்சிவ பூசையு ளடியவர் பூசை
அதிக மென்றறிந் தன்பரை யருச்சனை செய்வாய்

1877 உறுதி யெய்தினை யிருமையு முன்பெயர்க் கேற்ப
இறுதி யில்லவன் றிருவுரு வீகையாற் காணப்
பெறுதி யாகநின் மனைக்கிடைப் பித்தளை யீயம்
அறுதி யானபல் கலன்களுங் கொணர்தியென் றறைந்தார்

1878 ஈயஞ் செம்பிரும் பிரசிதங் மென்பவும் புணர்ப்பாற்
றோயம் பித்தளை வெண்கலந் தராமுதற் றொடக்கத்
தாயும் பல்வகை யுலோகமுங் கல்லென வலம்பத்
தேயுஞ் சிற்றிடை கொண்டுபோய்ச் சித்தர்முன் வைத்தாள்

சித்தமூர்த்திகள் இரசவாதம் புரிதல்

1879 வைத்த வேறுவே றுலோகமு மழுவுழை கரந்த
சித்த சாமிக ணீற்றினைச் சிதறினர் பாவித்
தித்தை நீயிரா வெரியிலிட் டெடுக்கினன் பொன்னாம்
அத்தை நாயகன் றிருவுருக் கொள்கென வறைந்தார்

1880 மங்கை பாகரை மடந்தையு மிங்குநீர் வதிந்து
கங்குல் வாயமு தருந்தியிக் காரிய முடித்துப்
பொங்கு காரிருள் புலருமுன் போமெனப் புகன்றாள்
அங்க யற்கணா டனைப்பிரி யாரதற் கிசையார்

1881 சிறந்த மாடநீண் மதுரையிற் சித்தர்யா மென்று
மறைந்து போயினார் மறைந்தபின் சித்தராய் வந்தார்
அறைந்த வார்கழ லலம்பிட வெள்ளிமன் றாடி
நிறைந்த பேரொளி யாயுறை நிருத்தரென்று அறிந்தாள்

பொன்னனையாள் உலோகங்களைத் தீயிலிட்டுப் பொன்னாதல்

1882 மறைந்து போயினா ரெனச்சிறி தயர்ச்சியு மனத்தில்
நிறைந்த தோர்பெருங் கவற்சியை நீக்கினா ரென்னச்
சிறந்த தோர்பெரு மகிழ்ச்சியு முடையளாய்ச் சித்தர்
அறைந்த வாறுதீப் பெய்தன ளுலோகங்க ளனைத்தும்

1883 அழல டைந்தபி னிருண்மல வலிதிரிந் தரன்றாள்
நிழல டைந்தவர் காட்சிபோ னீப்பருங் களங்கங்
கழல வாடக மானதா லதுகொண்டு கனிந்த
மழலை யீர்ஞ்சொலாள் கண்டனள் வடிவிலான் வடிவம்

(அறுசீரடி ஆசிரிய விருத்தம்)

1884 மழவிடை யுடையான் மேனி வனப்பினை நோக்கியச்சோ
அழகிய பிரானோ வென்னா வள்ளிமுத் தங்கொண் டன்பிற்
பழகிய பிரானை யானாப் பரிவினாற் பதிட்டை செய்து
விழவுதேர் நடாத்திச் சின்னாள் கழிந்தபின் வீடு பெற்றாள்

1885 நையநுண் ணிடையி னாளந் நாயகன் கபோலத் திட்ட
கையுகிர்க் குறியுஞ் சொன்ன காரணக் குறியுங் கொண்டு
வெய்யவெங் கதிர்கால் செம்பொன் மேனிவே றாகி நாலாம்
பொய்யுகத் தவர்க்குத் தக்க பொருந்துரு வாகி மன்னும்

இரசவாதம் செய்த படலம் முற்றிற்று.

## 49.திருவாலவாய்க் காண்டம்

(வங்கிய சேகர மன்னனுக்கு மதுரையின் எல்லைகளைக் காட்டுதல்)

### சித்தரை மன்னன் பணிந்து வேண்டுதல்

2338 கறையணி கண்டனைத் தாழ்ந்து கைதொழு
திறையவ நின்னருள் வலியி னிந்நிலப்
பொறையது வாற்றுவேற்கு ஈண்டிப் போதொரு
குறையதுண் டாயினது என்று கூறுவான்

2339 இத்தனை மாக்களும் இருக்கத் தக்கதாப்
பத்தனங் காணவிப் பதிக்க ணாதியே
வைத்தறை செய்திடும் வரம்பு காண்கிலேன்
அத்தமற் றதனையின் றறியக் காட்டென்றான்

2340 நுண்ணிய பொருளினு நுண்ணி தாயவர்
விண்ணிழி விமானநின் றெழுந்து மீனவன்
திண்ணிய வன்பினுக் கெளிய சித்தராய்ப்
புண்ணிய அருட்கடல் ஆகிப் போதுவார்

### சித்தர் வடிவில் சிவபெருமான் அருள் செய்தல்

2341 பாம்பி னாற்கடி சூத்திரங் கோவணம் பசுந்தாட்
பாம்பி னாற்புரி நூல்சன்ன வீரம்வெம் பகுவாய்ப்
பாம்பி னாற்குழை குண்டலம் பாதகிண் கிணிநாண்
பாம்பி னாற்கர கங்கணம் பரிந்தனர் வந்தார்

2342 வந்த யோகர்மா மண்டப மருங்குநின் றங்கைப்
பந்த வாலவா யரவினைப் பார்த்துநீ யிவனுக்
கிந்த மாநக ரெல்லையை யளந்துகாட்டு என்றார்
அந்த வாளரா வடிபணிந் தடிகளை வேண்டும்

2343 பெரும விந்நகர் அடியனேன் பெயரினால் விளங்கக்
கருணை செய்தியென் றிரந்திடக் கருணையங் கடலும்
அருண யந்துநேர்ந்து அனையதே யாகெனப் பணித்தான்
உருகெ முஞ்சின வுரகமும் ஒல்லெனச் செல்லா

**பாம்பு எல்லையைக் காட்டுதல்**

2344 கீட்டி சைத்தலைச் சென்றுதன் கேழ்கிளர் வாலை
நீட்டி மாநகர் வலம்பட நிலம்படிந் துடலைக்
கோட்டி வாலைவாய் வைத்துவேற் கொற்றவற்கு எல்லை
காட்டி மீண்டரன் கங்கண் மானது கரத்தில்

**மதில் அமைத்தல்**

2345 சித்தர் தஞ்சின கரத்தெழுந் தருளினார் செழியன்
பைத்த வாலவாய் கோலிய படிசுவர் எடுத்துச்
சுத்த நேமிமால் வரையினைத் தொட்டகழ்ந் தெடுத்து
வைத்த தாமென வகுத்தனன் மஞ்சுசூ ழிஞ்சி

2346 தென்றி சைப்பரங் குன்றமும் வடதிசை இடபக்
குன்ற முங்குடக்கு ஏடக நகரமுங் குணபாற்
பொன்ற லங்கிழித் தெழுபொழிற் பூவண நகரும்
என்ற நாற்பெரு வாயில்கட்கு எல்லையா வகுத்தான்

2347 அனைய நீண்மதில் ஆலவாய் மதிலென அறைவர்
நனைய வார்பொழில் நகரமு மாலவாய் நாமம்
புனைய லாயதெப் போதுமப் பொன்னகர் தன்னைக்
கனைய வார்கழற் காலினான் பண்டுபோற் கண்டான்

2348 கொடிகள் நீண்மதின் மண்டபங் கோபுரம் வீதி
கடிகொள் பூம்பொழில் இன்னவும் புதியவாக் கண்டு
நெடிய கோளகை கிரீடம்வா ணிழன்மணி யாற்செய்
தடிகள் சாத்திய கலன்களும் வேறுவே றமைத்தான்

2349 பல்வ கைப்பெருங் குடிகளின் பரப்பெலா நிரப்பிச்
செல்வ வானவர் புரந்தரன் புரத்தினுஞ் சிறப்ப
மல்லல் மாநகர் பெருவளந் துளும்பிட வளர்த்தான்
தொல்லை நாட்குல சேகரன் போல்வரு தோன்றல்

**திருவாலவாயான படலம் முற்றிற்று.**

வேசமுற விருந்த கமு திரைமுடிந்த வடமின்றும்
பூசுரர்கள் பணிந்தேத்தும் பூவண நன்னகர் மருங்கிற்
காசின் மேல் விளங்கியது கமுவர் படைவீடெனவே

– செல்லிநகர்ப் பெரும்பற்றப் புலியூர் நம்பி,
திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்,
கமுவேறிய திருவிளையாடல் – பா.50

**இத்தலத்தைப் பற்றி வேறு தலங்களில் வழங்கும் தேவாரப் பாடல்கள்**

பூவண மேவும் பூவண நாதர்
பூவண நாயகி புந்திகூர் வைகை (சிவ.)
பூவணமும் புறம்பயமும் பொருந்தினானை
– ஆலம் பொழில் . திரு நா.
பூவணத்தவன் புண்ணியன் – குடமூக்கு – திருநா.
பூவணமோ புறம்பயமோ வன்றாயிற்றால் – ஆரூர். திருநா.
புகலூரும் பூவணமும் பொருந்தினான்காண் – ஆரூர். திருநா.
பூவணமும் வலஞ்சுழியும் பொருந்தினானை – வெண்ணியூர்.
திருநா.

புகலூரும் பூவணமும் பொருந்தினாரும் – வெண்ணியூர். திருநா.
பொதியிலானே பூவணத்தாய் – வலிவலம். திருஞா.
திருச்செம்பொன்பள்ளி திருப்பூவணம் – அதிகை. திருநா
தென்புறம் பயம் பூவணம் பூழியூரும் – பொது. திருஞா
புத்தூருறையும் புனிதனைப் பூவணத் தெம் போரேற்றை – பொது.
திருநா
பூவணக் கிழவனாரை – பொது. திருநா
புறம்பயம் பூவணம் பொய்கை நல்லூர் – பொது. திருநா

தனிப்பாடல்

தலையி லிரந் துண்பான் தன்னுடலிற் பாதி
மலைம களுக் கீந்து மகிழ்வான்
உலையில் இருப்புவண மேனியனார் என்றாலோ
ஆம் ஆம் திருப்பூவண நாதர் திறம்

ஜமீன்தார் ஒருவர் (பெயர் குறிப்பிடப்பெறவில்லை) இப்பாடலின் முதல் இரண்டு அடிகளை மட்டும் பாடிவிட்டுப் பாடலை முடிக்காமல் நிறுத்தி விட்டார். அப்போது அவர் வீட்டில் களவு செய்யச் சில கள்வர்கள் வந்திருக்கின்றனர். வருமையின் காரணமாகப் பொருள் வேண்டிய "புலவர் மருதூரந்தாதி தலைமலைகண்டதேவர்" என்பவர் கள்வர்களுக்குத் துணையாக வந்திருக்கிறார். ஜமீன்தாரின் பாடல் பாதியில் நின்றதைக் கேட்ட புலவர், மூன்றாவது வரியைப் பாடியுள்ளார். உடனே ஜமீன்தார் நான்காவது வரியைப் பாடிப் பாட்டை முடித்துள்ளார். இவ்வகையில் கள்வர்களைக் களவு செய்யவிடாமல் தடுக்கும் வகையிலும், ஜமீன்தாரின் பாடல் நிறைவு பெறும் வகையிலும், புலவர் செயலாற்றியுள்ளார். இதனைப் பாராட்டிய ஜமீன்தார் அவருக்குப் பரிசுகள் வழங்கி வழியனுப்பி வைத்துள்ளார். – அடிகளாசிரியர், சரசுவதி மகால் வெளியீடு, எண் 126, தஞ்சாவூர், 1968.

முற்றும்

சுபம்

*****

# நன்றியுரை

இந்நூலாக்கத்திற்கு என்னை நெறிப்படுத்திய எனது ஆசான் முனைவர் இரா.பாலசுப்பிரமணியன் அவர்களுக்கும், நான் காணச் செல்லும்போதெல்லாம் என்சகோதரிபோல் என்னை இன்முகத்துடன் வரவேற்று ஊக்கப்படுத்திய திருமதி.கவிதா பாலசுப்பிரமணியன் அவர்களுக்கும், நல்லாசிகள் வழங்கி என்னை அருள்நெறிப்படுத்திய சென்னை "குமுதம்ஜோதிடம்" ஆசிரியர் உயர்திரு.A.M.ராஜகோபாலன் அவர்களுக்கும், நான் காணும் போதெல்லாம் என்கையில் ஆன்மிகம் தொடர்பான புத்தகங்களைக் கொடுத்து படிக்கச் செய்து என்னை நல்லாற்றுப்படுத்திய காரைக்குடி பேராசிரியர். தே.சொக்கலிங்கம் அவர்களுக்கும், இப்புத்தகம் சிறப்பாக வெளிவர தேவையான தகவல்களைத் தந்து உதவிய ஸ்தானிகர்கள் திரு.தெய்வசிகாமணி பட்டர், திரு.சுப்பிரமணியன் பட்டர், திரு.செண்பகப் பட்டர் அவர்களுக்கும், புகைப்படங்கள் எடுப்பதில் உதவிய என்தங்கை திருமதி.மு.கலையரசி அவர்களுக்கும், தட்டச்சு செய்வதில் உதவிய என் உடன்பிறவாச் சகோதரி சபா.கீதா (கண்காணிப்பாளர், அழகப்பா பல்கலைக்கழகம்) அவர்களுக்கும், பிழைத் திருத்தத்தில் உதவிய பேராசிரியர் முனைவர்.S.இராசாராம் மற்றும் பல்கலைக்கழக உதவிப்பதிவாளர் திரு.க.பழனியப்பன் அவர்களுக்கும், நூலை அச்சிட்டு வெளியிடப் பணஉதவி வழங்கிய திருப்பதி தேவஸ்தானத்திற்கும், நூலை வெளியிடத் துணைசெய்த சிவகங்கை தேவஸ்தான மேலாளர் திரு.பா.இளங்கோ மற்றும் தேவஸ்தான அலுவலர்கள் அனைவருக்கும், இந்நூலை வெளியிடப் பெரிதும் உதவி செய்த பேராசிரியர். முனைவர். ரெ.சந்திரமோகன் அவர்களுக்கும், திரு.சுப.லெட்சுமணன், திரு.தி.கண்ணன் மற்றும் பல்கலைக்கழகத் தொலைபேசி இணைப்பாளர் திரு.செ.கருணாநிதி அவர்களுக்கும், எனக்குப் பலவகையிலும் உதவியாய் இருந்த என்னுடன் பணியாற்றும் அனைத்து சகோதர சகோதரிகளுக்கும், எனது உடன்பிறந்த தம்பி திரு.கா.சுந்தரபாண்டியன் (காவல்துறை) அவர்களுக்கும், இந்நூலை அச்சிடத்தேவையான தொகையைக் கடனாக வழங்கி உதவிய அழகப்பா பல்கலைக்கழக வளாக இந்தியன்வங்கி நிர்வாகத்தினருக்கும், இந்நூலைச் சிறப்பான முறையில் அச்சிட்டு உதவிய காரைக்குடி ஸ்ரீ லெட்சுமி அச்சகத்தாருக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூலை வெளியிடுவதற்கான என் உழைப்பில் சரிபாதி எனது மனைவி நாகலெட்சுமியையும் மறுபாதி என்மகள் நித்யாவையும் சேரும்.

இவர்கள் அனைவரும் திருப்பூவணநாதர் திருவருளால் அனைத்து நலன்களையும் பெற்று வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்திட வாழ்த்துகிறேன்.

(கி. காளைராசன்)

# இந்நூலாசிரியரின் பிற கட்டுரைகள்



இந்நூல் ஆசிரியர் கி.காளைராசன் அவர்களது படைப்புகளை **ஆன்மிகம், ஆன்மிக அறிவியல் மற்றும் திருக்குறள் ஆய்வுக் கட்டுரைகள்** என்று மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். இக் கட்டுரைகள் தினபூமி, தினமலர், மஞ்சரி, தமிழ் மாருதம், செந்தமிழ்ச் செல்வி, ஓம்சக்தி, மெய்கண்டார், கண்ணியம் ஆகிய இதழ்களில் வெளிவந்துள்ளன.

| **வரிசை எண்** | **கட்டுரைத் தலைப்பு** | **கட்டுரையின் பொருள்** |
|---|---|---|
| **ஆன்மிகக் கட்டுரைகள்** | | |
| 1 | ஐயாவிடம் சொல்லிவிட்டேன் அவர் பார்த்துக்கொள்வார் | காரைக்குடி–கோட்டையூர் அருகில் உள்ள வேலங்குடி கிராமத்தில் வீற்றிருந்து அருளும் ஸ்ரீ சொற்கேட்ட விநாயகரின் திருவருள் பற்றியது |
| 2 | என்பிழை பொறுப்பாய் எம்மானே | திருப்பூவணத்தில் சிவபெருமான் பார்வதி தேவிக்கு வரம் அருளியது |
| 3 | பாவம் போக்கும் பூவணம் | திருப்பூவணத்திருத்தலத்தின் பெருமைகள் குறித்து |
| 4 | சித்தர் வடிவில் சிவபெருமான் | 36வது திருவிளையாடற் புராணம் – சித்தர் வடிவில் சிவபெருமான் திருப்பூவணத்தில் எழுந்தருளி இரசவாதம் செய்தருளியது |
| 5 | ஆற்றின் குறுக்கே 1008 லிங்கம் | திருப்பூவணத்தில் திருக்கோயில் எதிரே ஓடும் வைகை ஆற்றில் லிங்கங்கள் புதையுண்டிருப்பது பற்றிய கட்டுரை |
| 6 | கல்லா? கடவுளா? | கல்லால் ஆன வடிவங்கள் எப்படிக் கடவுள் போன்று செயல்பட முடியும் என்பதற்கான விளக்கம் |
| 7 | சாமி என்ன சாப்பிடவா செய்கிறார்? | கடவுளுக்குப் படைக்கப்படுபவை அவரை எவ்வாறு சென்றடைகின்றன என்பதற்கான விளக்கம் |

